# தமிழ் யாப்பு

## சில புதிய கோணங்கள்

டாக்டர் கு. மோகனராசு



வள்ளுவர் கழகம், சென்னை

1980

**படையல்**

மதுரை காமராசர் பல்கலைக் கழக

மாண்பமை துணைவேந்தர்

பேராசிரியர்

டாக்டர்

**வ. சுப. மாணிக்கம்**

அவர்களுக்கு

## ஆசிரியரின் நூல்கள்

| | | |
|---|---|---|
| 1. | ஓர் எரிமலையின் எதிரொலி | ரூ. 0-50 |
| 2. | தொல்காப்பிய விருந்து | ரூ. 3-50 |
| 3. | முப்பாலில் முச்சீர் முத்துகள் | ரூ. 2-50 |
| 4. | குறள் தரும் ஆத்திசூடி | ரூ. 2-50 |
| 5. | ஒரு புல்லிதழின் புலம்பல் | ரூ. 1-50 |
| 6. | ஒப்புமை ஒளியில் வள்ளுவம் | ரூ. 4-00 |
| 7. | தமிழ் யாப்பு - சில புதிய கோணங்கள் | ரூ. 7-00 |
| 8. | வள்ளுவர் வழங்கும் விருதுகள் | (அச்சில்) |
| 9. | கன்பியூசியசும் வள்ளுவரும் கண்ட கல்வியியல் சிந்தனைகள் | (அச்சில்) |

# வாழ்த்துரை

## பேராசிரியர் டாக்டர் தி. முத்து - கண்ணப்பர்

**மோகனராசு வாழ்க !**

இளமையில் புலமை பெற்றோன்;
 'இன்றமிழ் ஆய்வே என்றன்
உளமதில் பொங்கும் ஆசை;
 உயிர்மூச்சு மதுவே' என்போன்;
வளமிகு யாப்பை ஆய்ந்து
 வல்லுநர் வியக்கச் செய்தான்;
முளையிலே நிரம்பக் கற்ற
 **மோகன ராசு** வாழ்க !

8—11—80
சென்னை-20

**தி. முத்து - கண்ணப்பன்**

## நூல் கிடைக்கும் இடங்கள்

1. சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்
   சென்னை-1

2. தமிழ்ப் புத்தகாலயம்
   சென்னை-5

3. தமிழ்மணி புத்தகப் பண்ணை
   தி. நெ. சாலை, திருவல்லிக்கேணி, சென்னை-5

4. மணிவாசகர் நூலகம்
   சென்னை-1

5. மீனாட்சி புத்தக நிலையம்
   சென்னை-1

6. வள்ளுவர் கழகம்
   69, வேங்கட ரங்கம் (பிள்ளைத்) தெரு
   திருவல்லிக்கேணி, சென்னை-5

## என் எண்ணம்

சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறையில் / தமிழ் இலக்கியத் துறையில் நடைபெற்ற ஆசிரியர் / மாணவர் கருத்தரங்குகளில் படிக்கப்பட்ட கட்டுரைகளுள் ஆறு கட்டுரைகளின் தொகுப்பே இந்நூல்.

இவற்றுள், 'வெண்பாப் யாப்பில் எழுத்தும் சந்தமும்', 'வெண்பாவில் ஓரசைச் சீர்கள் - ஓர் ஆய்வு', 'திருக்குறளில் தலையாகு எதுகைகள்' என்னும் மூன்று கட்டுரைகளும் சென்னைப் பல்கலைக் கழக வெளியீடான கீழைக்கலை இதழில் (Annals of Oriental Research) வெளிவந்துள்ளன.

'அசையும் பொருளும்' என்னும் கட்டுரை, தமிழ்ப் பொழிலில் வெளிவந்துள்ளது. 'குறள் வடிவமும் வள்ளுவர் நோக்கமும்' என்னும் கட்டுரை, 'வடிவமும் வள்ளுவர் குறிக்கோளும்' என்னும் தலைப்பில் காவியப் பாவை, தமிழ்ப்பொழில் ஆகிய இதழ்களில் வெளி வந்துள்ளது.

'ஆத்திசூடியின் அமைப்புமுறை' என்னும் கட்டுரை செந்தமிழ்ச் செல்வியில் வெளிவந்துள்ளது. பொருத்தமும் இன்றியமையாமையும் கருதி, இக்கட்டுரை 'குறள் தரும் ஆத்திசூடி' என்னும் நூலின் முன்னுரையாகவும் வந்துள்ளது.

இந்நூலில் உள்ள கட்டுரைகள் பல்வேறு நோக்கின; புதிய வரவுகளுக்கு வாழ்த்துப் பாடுவன; புதிய சிந்தனை களுக்கு வித்திடுவன. இவை, ஆய்வு உலகிற்கு அரிய வரவுகள்; ஆய்வுத் தூண்டிகள். மொத்தத்தில், பலர் தொட அஞ்சியவற்றையும் தொட முனைகின்றது இந்நூல் என்பது என் எண்ணம்.

*11—11—80* **கு. மோகனராசு**

## நன்றிக்கு உரியோர்

என் வாழ்க்கையின் நம்பிக்கை ஒளியாக விளங்கும் 'சிந்தனைச் செம்மல்' பேராசிரியர் டாக்டர் ந. சஞ்சீவி அவர்கள்

இந்நூலில் இடம் பெற்றுள்ள கட்டுரைகளைத் தம் இதழ்களில் வெளியிட்டு உதவிய இதழாசிரியர்கள்

வாழ்த்துரை வழங்கிய பேராசிரியர் டாக்டர் தி. முத்து-கண்ணப்பர் அவர்கள்

இந்நூலின் தட்டச்சுப் படிகளைப் படித்து (அச்சுப் படிகளுடன் ஒப்பிட்டுப் பார்க்க) உதவிய என் மகன் கு. மோ. பாவேந்தன் (8 வயது).

இந்நூலினை விரைந்து அச்சிட்டு உதவிய அவ்வை அச்சுக்கூடத்தார்.

# குறுக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| அகம். | = | அகநானூறு |
| இ$^{*}$ | = | இடையின ஒற்று |
| இ$^{0}$ | = | இடையின உயிர்மெய்க் குறில் |
| இ$^{1}$ | = | இடையின உயிர்மெய் நெடில் |
| உ. அ | = | உயிர் அளபெடை |
| உ | = | உயிர்க் குறில் |
| உ$^{*}$ | = | உயிர் நெடில் |
| ஐங். | = | ஐங்குறுநூறு |
| ஒ | = | ஒற்று |
| கலி. | = | கலித்தொகை |
| கு | = | குறில் |
| கு$^{c}$ | = | குற்றியலுகரம் |
| குறள். | = | திருக்குறள் |
| சிலப். | = | சிலப்பதிகாரம் |
| தொல். | = | தொல்காப்பியம் |
| நற். | = | நற்றிணை |
| நாலடி. | = | நாலடியார் |
| நெ | = | நெடில் |
| ப. | = | பக்கம் |
| பக். | = | பக்கங்கள் |
| புறம். | = | புறநானூறு |
| மலை. | = | மலைபடுகடாம் |

| | | |
|---|---|---|
| மு$^{*}$ | = | முற்றியலுகரம் |
| மு. நூ. | = | முன்னர்ச் சுட்டிய நூல் |
| மெ | = | மெய் |
| மெ$^{*}$ | = | மெல்லின ஒற்று |
| மெ$^{0}$ | = | மெல்லின உயிர்மெய்க் குறில் சொல்லின் ஈற்றில் வரும் மெய் |
| மெ$^{1}$ | = | மெல்லின உயிர்மெய் நெடில் |
| மெ$^{x}$ | = | சொல்லின் ஈற்றில் வருதல் இல்லாத மெய் |
| மெ$_{1}$ மெ$_{2}$ | = | இரு வேறுபட்ட மெய்கள் |
| யா.வி. | = | யாப்பருங்கல விருத்தி |
| வ$^{*}$ | = | வல்லின ஒற்று |
| வ$^{0}$ | = | வல்லின உயிர்மெய்க் குறில் |
| வ$^{1}$ | = | வல்லின உயிர்மெய் நெடில் |
| வண். | = | வண்ணத்தியல்பு |
| வ. யா. | = | குமார பூபதியம் என்னும் வண்ணப்பா யாப்பிலக்கணம் |
| p. | = | page |
| pp. | = | pages |
| { } | = | இக்குறியீட்டில் உள்ள எழுத்துகள் சந்தத்திற்கு அடிப்படையானவை |
| ( ) | = | இக்குறியீட்டில் உள்ள எழுத்துகள் சந்தத்திற்கு அடிப்படையானவை அல்ல. |

# கோணம் கொண்ட கோலங்கள்

# 1. வண்ணப்பா யாப்பில் எழுத்தும் சந்தமும்

## 1.1 கட்டுரை எல்லை

**1.1.1** தமிழில் சந்தப்பாக்கள் (வண்ணப்பாக்கள்) தோன்றிப் பல நூற்றாண்டுகள் ஆகின்றன. அவற்றிற்கான யாப்பினை வரையறுக்கும் முழுமையான முயற்சி இவ்விருபதாம் நூற்றாண்டில்தான் மேற்கொள்ளப் பட்டுள்ளது எனலாம். இம் முயற்சிக்கு அடிக்கல் நாட்டியவராகத் தோன்றுபவர் திருவாமாத்தூர் கௌமார மடாலயம் மகான் — வண்ணச்சரபம் அருட்பெருந்திரு **தண்டபாணி சுவாமிகள்** எனலாம். வண்ணப்பா யாப்பைப் பற்றி இவர் எழுதிய நூல் '**வண்ணத்தியல்பு**' என்பதாகும்.

**1.1.1.1** இந்நூல் இரு பிரிவுகளைக் கொண்டது. ஒன்று பாயிரம்; மற்றொன்று நூல். பாயிரப் பிரிவில் 10 பாடல்கள் உள்ளன; காப்பு, அதிகாரி இலக்கணம், கற்றோர் தன்மை, அனுமானக் குறிப்பு, அவையடக்கம், நூற்காரணமும் பெயரும் பயனும், ஆக்கியோன் தேற்றம், நூல் மாட்சி, நூற்பிறப்பிடம், காலமும் அரங்கும் ஏற்றோரும் என்பன பாயிரப் பிரிவினுள் அடக்கம். மூன்று பாடல்களுக்கு மட்டுமே விளக்கக் குறிப்புகள் உள்ளன.

**1.1.1.2** நூற்பிரிவில் 25 தலைப்புகளின் கீழ் நூறு நூற்பாக்கள் உள்ளன. ஒரு நூற்பாவுக்கு மட்டுமே சிறு

விளக்கம் உள்ளது. எடுத்துக்காட்டுகள் நூற்பாக் களிலேயே கொடுக்கப்பட்டுள்ளன.

1.1.2 'வண்ணத்தியல்பு' என்னும் இந்நூலை அடிப் படையாகக் கொண்டு எழுந்த நூல் 'குமார பூபதீயம் என்னும் *வண்ணப்பா யாப்பிலக்கணம்'* ஆகும். இந் நூல் ஒரு தற்சிறப்புப் பாயிரத்தையும் 62 நூற்பாக்களை யும் கொண்டது. முன்னதினும் இந்நூல் தொகைவகைத் தெளிவும் எளிமையும் பெற்று விளங்குகின்றது எனலாம்.

1.1.2.1 தற்சிறப்புப் பாயிரத்தில், தெய்வ வணக்கத்தினும் அடியார் வணக்கமே சிறப்புடையது எனக் கருதி, ஆசிரியர் அடியார் வணக்கம் பாடி யுள்ளார்.[1]

1.1.2.2 நூலின் தொடக்கத்தில்,

"எழுத்தே, சந்தம், சீரே, வண்ணத்
தொடரே, துள்ளல், தொங்கல், குழிப்பே,
கலையே, அடியே, வண்ணம், வகுப்பெனப்
பதினொன்றும் வண்ண யாப்புறுப் பாகும்"

(வ. யா. 2)

என வண்ணப்பா உறுப்புகள் பதினொன்றைச் சுட்டி அவை ஒவ்வொன்றையும் தெளிவாக விளக்கிச் செல்கின்றார்; எடுத்துக்காட்டுகள் நூற்பாவிற்குள் அமையாமல் நூற்பாவிற்குப் புறத்தே சுட்டப்பட்டுள்ளன; சீர், வண்ணத் தொடர் முதலிய வண்ணப்பா உறுப்புகள் ஒவ்வொன்றுக்கும் தக்க எடுத்துக்காட்டுகள் காட்டிய ஆசிரியர் பெரும்பாலானவற்றிற்குச் சந்தங்கள் பிரித்தும் காட்டியுள்ளார். இப்போக்கு, எளிமைக்கும் எளிமை சேர்க்கின்றது எனலாம்.

1.1.3 மேற்சுட்டிய இரு நூல்களிலும் எழுத்து, சந்தம் பற்றி உரைக்கப்படும் கருத்துகளே இங்கு ஆராயப் படுகின்றன.

## 1.2 எழுத்து

1.2.1 வண்ணத்தியல்பு, எழுத்துகளை உயிர் மெய் உயிர்மெய் ஆய்தம் என நான்காகப் பிரிக்கின்றது.[2] வண்ணப்பா யாப்பிலக்கணம், எழுத்துகளை மெய் உயிர் உயிர்மெய் குறில் நெடில் வல்லினம் மெல்லினம் இடையினம் ஆய்தம் என ஒன்பதாகப் பிரிக்கின்றது.

"வண்ணப்பா இலக்கணத்துக்கு எழுத்துக்களின்
இத்தகைய பிரிவுகள் இன்றியமையாமையின்
இவ்வாறு ஒன்பதாகப் பகுக்கப்பட்டன"

(வ. யா. பக். 1)

என்பது இந்நூலாசிரியர் கூற்று. இவ்வொன்பதும் தொல்காப்பிய உரையாசிரியர்களும் யாப்பருங்கலக்காரிகை போன்ற யாப்பிலக்கண நூலாசிரியர்களும் ஏற்றுக்கொள்வனவே. இவ்வொன்பதொடு குற்றியலுகரம், குற்றியலிகரம், ஐகாரக் குறுக்கம். ஔகாரக் குறுக்கம். உயிரளபெடை, ஒற்றளபெடை, மகரக் குறுக்கம் என்பனவற்றையும் எழுத்தின் உறுப்புகளாகக் கொள்வர்.

1.2.2 சந்தப்பா, ஓசையை அடிப்படையாகக் கொண்டது; குற்றியலுகரம் குற்றியலிகரம் போன்றவைகளும் ஓசை நுட்பத்தை அடிப்படையாகக் கொண்டவை; அப்படியிருக்க, இவை வண்ணப்பாவில் எழுத்துறுப்புகளாக இடம் பெறாததன் காரணம் விளங்கவில்லை. இரு நூல்களிலும்,

"அருந்தமிழ்ச் சந்தத்(து) ஐயும் ஔவும்
ஈற்றில் குறிலாய் இடையினும் முதலினும்
குறிலொடொற் றெனவும் குலாஅய்ச் சிறிதும்
நெடிலென லின்றி நிகழும் அன்றே"

(வண். 2)

எனவும்,

"ஐஔ சந்தத் தீற்றிற் குறிலாம்;
இடையும் முதலும் குறிலொற் றாகக்
கொள்வது மரபாம் வண்ணப் பாவில்"

(வ. யா. 23)

எனவும் ஐகார ஔகாரக் குறுக்கங்களைப் பற்றிய செய்திகள் வருவதும் இங்கு கருதத் தக்கன.

**1.2.3** வண்ணப்பா யாப்பில் ஆய்த எழுத்து இடையின ஒற்றாகக் கருதப்படுகிறது.

(வண். 3; வ. யா. 22)

## *1.3* சந்தம்

**1.3.1** ஒன்றுக்கு மேற்பட்ட எழுத்துகள் இயைந்து வருவது சந்தம் எனப்படும் (வ. யா. 24). யாப்பிலக்கணத்தில் வரும் அசைக்கும் இச்சந்தத்திற்கும் ஒரு சில ஒற்றுமைக் கூறுகள் இருப்பினும் இரண்டும் ஒன்றல்ல. சந்தத்தைப் பின்வருமாறு பகுப்பர் :



## *1.4 சந்த வகைகள்*

**1.4.1** சந்த வகைகளுள் '*தத்த*' என்பது முதலாவது குறிக்கப்படுவது. (அ) ஒரு குறிலொடு ஒரு வல்லின மெய் வந்து, பின்பு அவ் வல்லின உயிர்மெய்க்குறில் வந்து ஒன்றின் அது '*தத்த*' என்னும் சம்பந்தமாகும்.

கு    வ$^*$    வ$^0$

(ஆ) முதற் குறிலுக்கும் வல்லின மெய்யினுக்கும் இடையில் இடையின மெய் ஒன்று வரினும் அது '*தத்த*' என்னும் சந்தமாகும்.

கு    (இ$^*$)    வ$^*$    வ$^0$

(இ) ஈற்றில் இடையின அல்லது மெல்லின மெய் வரினும் அது '*தத்த*' என்னும் சந்தமாகும்.

கு    வ$^*$    வ$^0$    (இ$^*$)

கு    வ$^*$    வ$^0$    (மெ$^*$)

கு    (இ$^*$)    வ$^*$    வ$^0$  (இ$^*$)

கு    (இ$^*$)    வ$^*$    வ$^0$  (மெ$^*$)

இந்தச் சந்தத்தின் எழுத்தமைப்புகளைப் பின்வருமாறு குறியீடு செய்யலாம் :

கு    (இ$^*$)    வ$^*$    வ$^0$    (இ$^*$ / மெ$^*$)

**1.4.2** இதைப் போன்றே, பிற சந்தக் குறியீடுகள் வருமாறு :

தத்தா — கு    (இ$^*$)    வ$^*$    வ$^1$    (இ$^*$ / மெ$^*$)

தாத்த — நெ    (இ$^*$)    வ$^*$    வ$^0$    (இ$^*$ / மெ$^*$)

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| தாத்தா | — | நெ | (இ$^{*}$) | வ$^{*}$ | வ$^{1}$ | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தந்த | — | கு | (இ$^{*}$) | மெ$^{*}$ | வ$^{0}$ | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தந்தா | — | கு | (இ$^{*}$) | மெ$^{*}$ | வ$^{1}$ | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தாந்த | — | நெ | (இ$^{*}$) | மெ$^{*}$ | வ$^{0}$ | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தாந்தா | — | நெ | (இ$^{*}$) | மெ$^{*}$ | வ$^{1}$ | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தன | — | கு | கு | (இ$^{*}$ / மெ$^{*}$) | | |
| தனா | — | கு | நெ | (இ$^{*}$ / மெ$^{*}$) | | |
| தான | — | நெ | (இ$^{*}$) | கு | (இ$^{*}$ / மெ$^{*}$) | |
| | | நெ | மெ$^{*}$ | {இ$^{0}$ / மெ$^{0}$} | (இ$^{*}$ / மெ$^{*}$) | |
| தானா | — | நெ | (இ$^{*}$) | நெ | (இ$^{*}$ / மெ$^{*}$) | |
| | | நெ | மெ$^{*}$ | {இ$^{1}$ / மெ$^{1}$} | (இ$^{*}$ / மெ$^{*}$) | |
| தன்ன | — | கு | மெ$^{*}$ | {இ$^{0}$ / மெ$^{0}$} | | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தன்னா | — | கு | மெ$^{*}$ | {இ$^{1}$ / மெ$^{1}$} | | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தய்ய | — | கு | இ$^{*}$ | {வ$^{0}$ / இ$^{0}$} | | (இ$^{*}$ / மெ$^{*}$) |
| தய்யா | — | கு | இ$^{*}$ | {வ$^{1}$ / இ$^{1}$} | | (இ$^{*}$ / மெ$^{*}$) |

**1. 4.3** இச் சந்தங்கள் பதினாறுக்கும் உரிய எழுத்து அமைப்பு முறைகளை நான்கு அடிப்படையான அடைவு களுக்குள் அடக்கலாம்.

{கு / நெ}  (இ*)  {வ* / மெ*}  {வ$^{0}$ / வ$^{1}$}  (இ* / மெ*)

கு  {கு / நெ}  (இ* / மெ*)

நெ  (இ*)  {கு / நெ}  (இ* / மெ*)

{கு / நெ}  {இ* / மெ*}  {கு / நெ}  (இ* / மெ*)

இவற்றுள்,

{கு / நெ}  வ*  {இ$^{0}$ / மெ$^{0}$}

{கு / நெ}  வ*  {இ$^{1}$ / மெ$^{1}$}

{கு / நெ}  இ*  {மெ$^{0}$ / மெ$^{1}$}

போன்ற அமைப்புகள் தமிழில் இடம் பெறாமையான் விலக்கற்குரிய.

## *1.5* சார்புச் சந்தம்

**1.5.1** தத்த, தாத்த முதலியன முதற்சந்தங்கள்; தத்தா, தாத்தா முதலியன சார்புச் சந்தங்கள். இவற்றுள், சார்புச் சந்தங்கள் தோன்றும் முறையை விளக்குகையில்,

> "முதற்சந்தம் எட்டொடும் ஆஈறு சேர
> ... சார்புச் சந்தம் தோன்றும்" (வ. யா. 25)

எனக் குறிப்பிடப்படுகிறது. அதாவது,

தத்த + ஆ → தத்தா
தாத்த + ஆ → தாத்தா } அ + ஆ → ஆ

இது வடமொழியில் உள்ள புணர்ச்சி விதி. இதனைத் தமிழில் சந்தம் வகுக்கையில் புகுத்த நினைப்பது ஏன் என்று விளங்கவில்லை. முதற்சந்தத்தின் ஈற்று நீட்சியே (ஒரு மாத்திரை கூடுதல்) சார்புச் சந்தம் எனக் கொள்ளலாமே!

## 1.6 'த்'வும் 'ன'வும்

1.6.1 வண்ணப்பா யாப்பில் 'த' என்பது உயிர்க் குறில்; வல்லின உயிர்மெய்க்குறிலும் உயிர்மெய்க் குறிலும் ஆகும். 'ன' என்பது மெல்லின இடையின உயிர்மெய்க்குறில்; உயிர்மெய்க்குறிலும் ஆகும்.

'த' — உயிர்க்குறில்
'த' — வல்லின உயிர்மெய்க்குறில்
'த' / 'வ' — உயிர் மெய்க்குறில்
'வ' — மெல்லின / இடையின உயிர்மெய்க்குறில்

அதாவது 'த'—வும் 'ன'—வும் உயிர்மெய்க்குறிலைச் சுட்டப் பயன்படுத்தப்பட்டுள்ள குறியீடுகள்.

1.6.2 மேலும், தன, தனா, தான, தானா என்னும் சந்தங்களில் வரும் 'ன', 'னா' முறையே உயிர்மெய்க் குறிலையும் உயிர்மெய் நெடிலையும் குறிப்பனவாம். தன்ன, தன்னா என்னும் சந்தங்களில் வரும் 'ன', 'னா' முறையே மெல்லின / இடையின உயிர்மெய்க் குறிலையும், மெல்லின / இடையின உயிர்மெய் நெடிலையும் குறிப்பனவாம்.

**1.6.3** இக் குழப்பங்களை நீக்க, தன தனா தான தானா என்னும் சந்தங்களை முறையே தத, ததா, தாத, தாதா எனக் கொள்ளலாமோ என எண்ணத் தோன்று கின்றது. வேறு குறியீடுகளும் தேவையானால் கொள்ளலாம்.

## *1.7 ஒரு சந்தமும் 1½ சந்தமும்*

**1.7.1** சந்தத்தின் இறுதியில் இடையின அல்லது மெல்லின மெய் சேரினும் சந்த வாய்ப்பாடு மாறுவதில்லை. அதாவது,

| | | | |
|---|---|---|---|
| ஒட்டு | → | தத்த | ஒரு சந்தம் |
| ஒட்டன் | → | தத்த | |

**1.7.2** ஒன்றரை சந்தங்கள் எவ்வாறு உண்டா கின்றன என்பதை விவரிக்கும் வண்ணப்பா யாப்பிலக்கண ஆசிரியர், சந்தத்தின் இறுதியில் மகர மெய் (மெல்லின மெய்) உறுவதனாலும் 1½ சந்தங்கள் உண்டாகின்றன என்கின்றார். அதாவது,

கற்பு → தத்த = ஒரு சந்தம்

கற்புங் → தத்த + ங் = 1½ சந்தம்

**1.7.2.1** மெல்லின மெய்யை ஈற்றில் பெற்று, ஒரே எழுத்தமைப்பைக் கொண்ட சந்தங்களை ஒரு சந்தம் என்றும் 1½ சந்தம் என்றும் கொள்ளும் மயக்க நிலை ஏற்படுகிறது. இம்மயக்க நிலையைப் போக்க, ஒரு சந்தத்தின் ஈற்றில் மெல்லின மெய் உற 1½ சந்தம் கிடைக்கும் என்னும் விதியை நீக்கலாமோ எனத் தோன்றுகிறது.

வண்ணப்பா யாப்பிலக்கணம் வகுக்கும் அறிஞர் பெருமக்கள் மேல் சுட்டிய எழுத்து, சந்தம் தொடர்பான

4

சில மயக்க நிலைகளுக்குத் தெளிவு காண்பார்கள் என்பது இந்நூலாசிரியன் எண்ணம்.

### குறிப்புகள்

1. "இதில் முதல் நான்கடியில் அடியார் வணக்கமும், இறுதி மூன்றடிகளில் செயப்படு பொருளும் கூறப்பட்டன...தெய்வ வணக்கத்தினும் அடியார் வணக்கம் சிறப்புடைத்து"

(வ. யா. ப. 1)

2. "உயிர்வகை ஈரா (று); ஒற்(று) ஈரொன்பான்,
இவற்றின் புணர்ச்சி இருநூற்றீரெட்(டு)
ஆய்தம் ஒன்றிவண் ஆய நால்வகை
எழுத்தும்". (வண். 1: 1—4)

# 2. அசையும் பொருளும்

## *2.1* அசையும் அமைப்பும்

**2.1.0** தொல்காப்பியம் கூறும் செய்யுள் உறுப்புகள் **34** (தொல். **1259**). அவற்றுள் மூன்றாவது உறுப்பாக விளங்குவது அசை.

**2.1.1** செய்யுளில் அசை என்பது (எழுத்தமைப்பு களின் அடிப்படையில்) ஓரெழுத்துத் தனித்து வருவது அல்லது எழுத்துகளின் மிகச் சிறிய கூட்டமைப்பு.

**2.1.2** அசையைத் தொல்காப்பியம் பின்வருமாறு வகைப்படுத்துகிறது:




"குறிலே நெடிலே குறிலிணை குறினெடில்
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றிசின் பெயரே"

(தொல். **1261**)

"இருவகை உகரமொ டியைந்தவை வரினே
நேர்பும் நிரைபும் ஆகும் என்ப
குறிலிணை உகரம் அல்வழி யான" (தொல். 1262)

எனவரும் நூற்பாக்கள் இரண்டும் நான்கு வகை அசைகளின் எழுத்தமைப்புகளை விளக்குகின்றன.

2.1.2.1 மேற்சுட்டிய, நான்கு வகை அசைகளுக்குரிய எழுத்தமைப்புகள் ஒவ்வொன்றையும், உயிர் எழுத்தை முதலாக உடையவை என்றும், உயிர்மெய் எழுத்தை முதலாக உடையவை என்றும் இரண்டிரண்டாகவும் பிரிக்கலாம்.

2.1.2.2 நேர், நிரை அசைகளின் இறுதியிலும், நேர்பு நிரைபு அசைகளின் இடையிலும் இருவேறு மெய் எழுத்துகள் சேர்ந்து வருவதும் உண்டு.

2.1.2.3 இவையேயன்றி, உயிரளபெடை, ஒற்றளபெடை, விட்டிசை முதலியனவும் அசை வகைகளில் கருதத்தக்கன.

## 2.2 அசையும் பொருளும்

2.2.1 தொல்காப்பியம் கூறும் அசைப் பகுப்புகள் பொருள் நோக்குடையன எனவும் பொருள் நோக்கு அற்றன எனவும் இருவேறு முரண்பட்ட கருத்துகள் உள்ளன. இம்முரண்பாடே இவ்வாய்வு ஏழ அடிப்படை ஆகும்

2.2.2 முதற்கண், அசைக்கும் பொருளுக்கும் உள்ள தொடர்பினை அட்டவணை வழிக் காண்போம்:

# அசை-பொருள் தொடர்பு

| அசை வகை | எழுத்தமைப்பு | சீரில் அசை அமையும் இட நிலை: முதல் | இடை | கடை | அசைக்குப் பொருள் உண்டு | அசைக்குப் பொருள் இல்லை | அசையளவிலான பொருளும் சீர் அளவிலான பொருளும்: ஒன்றுதல் | ஒன்றாமை |
|---|---|---|---|---|---|---|---|---|
| நேர் | | | | | | | | |
| கு | | √ | √ | √ | | | | |
| | உ | (விட். டிசை)* | (உ. அ.)* | (உ. அ.)* | 'அ ஆ' (நாலடி. 9:3) | 'உரனசைஇ' (குறள். 1236:1) | 'அ ஆ' (நாலடி. 9:3) | — |
| | மெஉ | | | √ | 'அகல்க' (சிலப். 7:22:2) | 'குண்டகழி' (புறம். 14:5) | 'அகல்க' (சிலப். 7:22:2) | — |
| குஒ | | | | | | | | |
| | உமெ | | | | | | | |
| | உமெ<sup>x</sup> | √ | (உ. √ அ.)* | (உ. √ அ.)* | — | 'அத்தச்' (ஐங். 273:1) | — | — |
| | உமெ<sup>ய</sup> | √ | √ (உ. அ.)* | √ உ. அ.)* | 'உண்டு றை' (ஐங். 28:1) | — | 'உண்டுறை' (ஐங். 28:1) | 'என்பில்' (குறள். 77:1) |

| அசை வகை | எழுத்தமைப்பு | சீரில் அசை அமையும் இட நிலை | | | அசைக்குப் பொருள் உண்டு | அசைக்குப் பொருள் இல்லை | அசையளவிலான பொருளும் சீர் அளவிலான பொருளும் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | முதல் | இடை | கடை | | | ஒன்றுதல் | ஒன்றாமை |
| | உமெ₁ மெ₂ | √ | | | — | 'உய்த்தல்' (குறள். 1287:1) | — | — |
| | மெஉமெ | | | | | | | |
| | மெஉமெ | √ | √ | √ | — | ,அத்தச்' (ஐங். 273:1) | — | — |
| | மெஉமெ⁰ | √ | √ | √ | 'முள்ளி' (ஐங். 21:1) | 'நாடன்' (ஐங். 261:2) | 'கண் களவு' (குறள். 1092:1) | 'சுரப்பின்' (குறள். 1051:1) |
| | மெஉ மெ₁மெ₂ | √ | √ | √ | — | 'துய்ப்பதூஉம்' (குறள். 1005:1) | — | — |
| நெ | | | | | | | | |
| | உ* | — | √ (விட்-டிசை)* | √ விட்-டிசை)* | 'ஈயென' (புறம். 204:1) | — | 'ஆபயன்' (குறள். 560:1) | 'ஆயும்' (குறள். 918:1) |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மெஉ* | √ | √ | √ | 'அ ஆ' (நாலடி. 9:3) 'நாடாமா' (குறள். 397:1) | 'நாடாமா' (குறள். 397:1) | 'குடிமை (குறள். (608:1) | 'அகவா' (கலி. 131:28) |
| நெஒ | | | | | | | | |
| | உ*மெ<br>உ*மெ | √ | | | — | 'ஆக்கம்' (குறள். 463:1) | — | — |
| | உ*மெ | √ | | | 'ஈன்றாள்' (குறள். 923:1) | — | ஆண்மகன்' (நற். 94:2) | 'ஆண்டை' (கலி. 13:16) |
| | உ*மெ$_1$<br>மெ$_2$ | √ | | | — | 'ஈர்ங்கை' (குறள் 1077:1) | — | — |
| | மெ*உமெ<br>மெ*உமெ$^x$ | √ | √ | √ | | 'கடிதோச்சி' (குறள். 562:1) | — | — |
| | மெஉ*மெ | √ | √ | √ | 'கடுங் கோல்' (குறள். 570:1) | — | 'காமநோய்' (குறள். 1159:1) | 'கல்லாதார்' (குறள். 409) |

| அசை வகை | எழுத்தமைப்பு | சீரில் அசை அமையும் இட நிலை | | | அசைக்குப் பொருள் உண்டு | அசைக்குப் பொருள் இல்லை | அசையளவிலான பொருளும் சீர் அளவிலான பொருளும் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | முதல் | இடை | கடை | | | ஒன்றுதல் | ஒன்றாமை |
| | மெஉ மெ$_1$மெ$_2$ | ✓ | ✓ | ✓ | 'காழ்த்த' (குறள். 879:2) | | | |
| நிரை | | | | | | | | |
| குகு | | | | | | | | |
| | உமெஉ | ✓ | ✓ + (உ. அ.)* | ✓ + (உ. அ.)* | 'அதுகொல்' (குறுந். 5:1) | 'அயிரை' (குறுந். 178:1) | 'அதுகொல்' (குறுந். 5:1) | 'எருமையும்' (தொல். 1539:1) |
| | மெஉ மெஉ | ✓ | ✓ | ✓ | 'கலிமழை' (ஐங். 264:1) | 'அமரிய' (அகம். 5:1) | 'கலிமழை' (ஐங். 264:1) | — |
| குகுஒ | | | | | | | | |
| | உமெ உமெ | | | | | | | |
| | உமெ உமெ$^x$ | ✓ | — | — | — | ஒறுப்ப (குறுந். 34:1) | — | — |

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| உமெ உமெ$^{0}$ | √ | √ | √ | 'இமிழ் கடல்' (புறம் 19:1) | 'அசும்பின் (அகம். 376:13) | 'இமிழ் கடல்' (புறம். 19:1) | அடும்பவிழ்' (குறுந்.349:1) |
| உமெஉ மெ$_1$மெ$_2$ | √ | √ | √ | — | 'இகழ்ந் தெள்ளா' (குறள். 1057:1) | — | — |
| மெஉமெ உமெ | | | | | | | |
| மெஉமெ உமெ | √ | √ | √ | — | 'உடும்புரித்' (புறம். 68:1) | — | — |
| மெஉமெ உமெ | √ | √ | √ | இமிழ் கடல்' (புறம். 19:1) | 'வள்ளியம்' (குறள்.598:2) | இமிழ்கடல்' (புறம்.19:1) | 'அகத்திடும்' (தொல்.11:1) |
| மெஉ மெஉ மெ$_1$மெ$_2$ | √ | √ | √ | — | 'புள் சிமிழ்த்' (குறள்.274:2) | | |

| அசை வகை | எழுத்தமைப்பு | சீரில் அசை அமையும் இட நிலை: முதல் | இடை | கடை | அசைக்குப் பொருள் உண்டு | அசைக்குப் பொருள் இல்லை | அசையளவிலான பொருளும் சீர் அளவிலான பொருளும்: ஒன்றுதல் | ஒன்றாமை |
|---|---|---|---|---|---|---|---|---|
| குநெ | | | | | | | | |
| | உமெஉ* | √ | √ + (உ. அ.)* | √ + (உ. அ.)* | ‘உடைவளை’ (புறம். 90:1) | ‘அரூஉம்’ (கலி. 8:10) | ‘உடைவளை’ (புறம். 90:1) | ‘அரைசர்’ (நற். 291:3) |
| | மெஉ மெஉ* | √ | √ | √ | ‘அகன் மலை’ (மலை. 205) | ‘அகப்படே என்’ | ‘அகன்மலை’ (மலை. 205) | ‘அணங்குடை’ (புறம். 52:1) |
| குநெஒ | | | | | | | | |
| | உமெ உமெ | | | | | | | |
| | உமெ உமெ$^{x}$ | √ | | | — | ‘உரைத்திசின்’ (குறுந். 302:1) | — | — |
| | உமெ உ*மெ$^{0}$ | √ | | | ‘உழார் நிலம்’ (குறுந். 110:3) | | | |

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | மெஉமெ உமெ மெஉமெ உ*மெ$^{x}$ | ✓ | ✓ | ✓ | — | 'கடாத்த' (கலி. 46:3) | — | — |
| | மெஉமெ உ*மெ$^{0}$ | ✓ | ✓ | ✓ | 'கமழ் கடாம்' (கலி. 48:5) | 'காட் சியோர்' (சிலப். 26:73) | 'கமழ்கடாம்' (கலி. 48:5) | பார்க் கலாம் |
| | மெஉ மெஉ* மெ$_1$மெ$_2$ | | | | — | 'சார்பிலார்ச்' (குறள். 449:2) | — | — |
| நேர்பு | நேர்கு* | ✓ | ✓ | ✓ | 'அன்பு நாண்' (குறள். 983:1) | — | | |
| | நேர்மு* | ✓ | ✓ | ✓ | 'பொய்க் காய்வு' (குறள். 1246:2) | | | |
| | நேர்கு*ஒ | ✓ | ✓ | ✓ | — | 'ஊற்றுக் கோல்' (குறள்.415:1) | — | — |

| அசை வகை | எழுத்தமைப்பு | சீரில் அசை அமையும் இட நிலை | | | அசைக்குப் பொருள் உண்டு | அசைக்குப் பொருள் இல்லை | அசையளவிலான பொருளும் சீர் அளவிலான பொருளும் | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | | முதல் | இடை | கடை | | | ஒன்றுதல் | ஒன்றாமை |
| நிரைபு | நேர்மு*ஒ | ✓ | ✓ | ✓ | — | 'நாணுத் தளை' (அகம்.29:21) | — | — |
| | நிரைகு* | ✓ | ✓ | ✓ | 'கடும் பகட்டு' (நற். 318:7) | — | — | — |
| | நிரைகு*ஒ | ✓ | ✓ | ✓ | | 'நெருப்புச் சினந்' (புறம்.125:2) | — | — |
| | நிரைமு* | ✓ | ✓ | ✓ | 'கடவுமதி' (நற். 321:8) | — | — | — |
| | நிரைமு*ஒ | ✓ | ✓ | ✓ | | 'கனவுக் கொல்' (கலி. 90:21) | — | — |

2.2.2.1 உயிரளபெடையில் வரும் உயிர்க்குறில், சீரின் ஈற்றில் தனியசையாக வரும் உயிர்மெய்க்குறில், சொல்லின் ஈற்றில் வருதல் இல்லாத மெய்யெழுத்துகளையும் இருவேறு மெய்களின் இணைவையும் ஈற்றில் பெற்று வரும் அசைகள், சொல்லின் முதலில் வருதல் இல்லாத உயிர்மெய் நெடில்களைப் பெற்ற அசைகள், ஒற்றொடு தோன்றி நிற்கும் உரிய சைகள் (பேராசிரியரின் கருத்து வழி) ஆகியவற்றுக்கு அசையளவிலும் பொருள் இல்லை என்பதை அட்டவணை காட்டுகிறது.

2.2.2.2 சொல்லின் ஈற்றில் வரும் மெய்யெழுத்துகளைப் பெற்றுவரும் அசைகள், குறில் குறில் — குறில் நெடில் இணைகள், சீரின் ஈற்றில் வரும் உயிர்மெய்க் குறில், சொல்லின் முதலில் வரத்தக்க உயிர்மெய் நெடில்கள் ஆகியவற்றுக்கு அசையளவில் பொருள் உண்மையும் இன்மையுமாகிய இருவேறு நிலைகள் காணப்படுகின்றன.

2.2.2.3 விட்டிசையில் வரும் உயிர்க்குறில், உயிர் நெடில், சீரின் முதலில் வரும் உயிர் நெடில், உரியசைகள் ஆகியவற்றுக்கு அசையளவில் பொருள் உண்டு என அறிகிறோம்.

2.2.2.4 அசையளவில் பொருளுடைய அசைகளுள்ளும், அசை அளவிலான பொருள் சீர் (அல்லது சொல்) அளவிலான பொருளுடன் ஒன்றுவனவும் உண்டு; ஒன்றாதனவும் உண்டு.

2.2.2.5 அதாவது, அசைகளுள், அசையளவில் பொருள் அற்றனவும் உண்டு; பொருள் பெற்றனவும் உண்டு. பொருள் பெற்ற அசைகளுள்ளும், அவற்றின் அசையளவிலான பொருள் சீர் (அல்லது சொல்) அளவிலான பொருளொடு ஒன்றுவனவும் உண்டு; ஒன்றாதனவும் உண்டு.

2.2.3 சீர் முதலில் குறில் தனித்து ஓர் அசையாக வருதல் இல்லை. அது ஒற்றொடு சேர்ந்து நேரசையாகி வரும்; குறில் அல்லது நெடிலொடு சேர்ந்து நிரையசை யாகி வரும். இவ்வாறு சேர்ந்து வரும்போது, அசையளவில் பொருள் பெற்று வருவதும் உண்டு; பொருள் அற்று வருவதும் உண்டு.

2.2.3.1 விட்டிசைக்கும்போது மட்டும் உயிர்க்குறில் அல்லது உயிர்மெய்க்குறில் தனி அசையாக வரும். இவ் வகையில் தனிக்குறிலுக்குப் பொருள் உண்டு.

2.2.3.2 விட்டிசைத்தல் அல்லாத இடத்து, ஒரு சீரின் முதல் எழுத்தாக அமையும் உயிர்க்குறிலை அல்லது உயிர்மெய்க் குறிலைத் தனியே பிரித்து, அதனை ஒரு தனியசையாகக் கொள்ளுதல் கூடாது.

2.2.3.3 'தனிக்குறில் முதலசை ***மொழிசிதைத் தாகாது***' என்பது தொல்காப்பியம் (1264). தொல் காப்பியம் எழுப்பும் இவ்வரையறை நிரை, நிரைபு அசை களை முதலசைகளாகக் கொண்ட சீர்களில் எழுவது. நிரை அசைகளுள் பொருள் பெற்ற அசைகளும் உண்டு; பொருள் அற்ற அசைகளும் உண்டு. நிரைபு அசைகள் பொருள் உடையவை. ஆகவே, பெரும் பான்மை நோக்கியது இவ்வரையறை என்று கொள்ளலாம்.

2.2.4 தொல்காப்பியம்,

> 'குற்றிய லுகரமும் முற்றிய லுகரமும்
> ஒற்றொடு தோன்றி நிற்கவும் பெறுமே'
>
> (தொல். 1267)

என மற்றொரு வரையறை தருகிறது. இந்நூற்பாவிற்குப் பேராசிரியர்,

> "குற்றுகர முற்றுகரங்கள் ஒற்றொடு நிற்கவும் பெறும் அவ்வொற்றுத் தோன்றிய ஒற்றாயின்...

> எனவே, அவை நிலைமொழி ஒற்றுடையவாயின் நேர்பும் நிரைபும் ஆகா. வருமொழி வல்லெழுத்து மிகினே யாவதென்றவாறு"

என விளக்கம் தந்து, '**சேற்றுக் கால்**' (யா. வி. ப., 236), '**நாணுத்** தளையாக' (அகம். 29 : 21), '**நெருப்புச் சினம்**' (புறம். 125 : 2), '**கனவுக்கொளீகண்டது**' (கலி. 90 : 21) என்பனவற்றைச் சான்று காட்டுகின்றார். பேராசிரியர் கொண்ட எழுத்தமைப்பு, (குறில் தனித்து வருதல் அல்லாத) நேரசை அல்லது நிரையசை + குற்றியலுகரம் அல்லது முற்றியலுகரம் + சொல்லின் ஈற்றில் வருதல் இல்லாத ஒற்றுகள் என்பதாகும். இவ்வமைப்பில், அசை யளவில் பொருள் இல்லை எனலாம். மேற்சுட்டிய நூற்பாவிற்குப் பேராசிரியர் கூறும் எழுத்தமைப்பு நிலை யைத் திரு. ஆபிரகாம் அருளப்பன் ஏற்றுக் கொள்கிறார்

2.2.4.1 இளம்பூரணர் தொல். 1267ஆம் நூற்பாவிற்கு வேறு பொருள் கொள்கின்றார். இருவகை உகரமும் ஒற்றொடு தோன்றித் தனியசையாகி நிற்கவும் பெறும் என்பது அவர் கருத்து. அதாவது, 'வேண்டு' என்பதில் வரும் 'டு' என்னும் குற்றியலுகரம் 'ம்' என்னும் மெய் யெழுத்தோடு தோன்றி 'டும்' என்னும் தனியசை (குறில் ஒற்றொடு வரும் நேரசை) யாகி நிற்கவும் பெறும் என்பது அவர் விளக்கம். இவ்வகையில் வரும் தனியசைகள் பொருள் பெற்று வருவதும் உண்டு; பொருள் அற்று வருவதும் உண்டு.

2.2.5 ஒரு சீரில் இரு சொற்கள் வரும்போது வருமொழியிலுள்ள உகரத்தைப் பிரித்து நிலைமொழி யொடு சேர்த்து நேர்பு நிரைபு அசைகள் கொள்ளுதல் கூடாது (தொல். 1266 : 1).

எடுத்துக்காட்டு :

வார் முரசு = வார் முரசு
நேர் நிரை

≠ வார்மு ரசு
நேர்பு நிரை

இங்கு பொருள் நோக்கு உள்ளது எனக் கொள்ளலாம்.

2.2.5.1 அதே போன்று, ஒற்றுமைப்பட்ட சொல்லினைச் சிதைத்து நேர்பு நிரைபு என்றும் கொள்ளுதல் கூடாது (தொல். 1266 : 1).

எடுத்துக்காட்டு :

அன்புடைமை ≠ அன்பு+டை+மை
நேர்பு நேர் நேர்

= அன்+புடை+மை
நேர் நிரை நேர்

இங்கு முதலசைக்கு (அன்) அசையளவில் பொருள் இருப்பினும், அசைப் பிரிப்பு, பொருள் நோக்கு உடையதா என்பது ஐயப்பாடே.

2.2.6 ஒற்றளபெடையில் அளபெடுத்து வரும் ஒற்று, தனி அசை ஆகலும் உண்டு என்பதை,

'அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே'

என்னும் தொல்காப்பிய நூற்பாவை (1274) அடுத்து வரும்,

'ஒற்றளபெடுப்பினும் அற்றென மொழிப'

என்னும் நூற்பாவால் (1275) அறிய முடிகிறது.

எடுத்துக்காட்டு :

'கண்ண்' (மலை. 352)

இங்கு, 'கண்ண்' என்னும் சீர் கண் + ண் (நேர் நேர்) எனப் பிரிந்து தேமாவாகிறது, இந்தச் சீரில் தனியசையாகி வரும் 'ண்' என்பதற்குப் பொருள் இல்லை.

2.2.7 பாக்கள் இசையொடு பொருந்தியவை; அந்தப் பாவின் மிகச் சிறிய கூறு எழுத்து; அந்த எழுத்துத் தனித்து வருவது அல்லது எழுத்துகளின் மிகச் சிறிய கூட்டமைப்பைப் பெற்று வருவது அசை; ஆகவே அசை இசையொடு தொடர்புடையது

'அசையும் சீரும் இசையொடு சேர்த்தி
வகுத்தனர் உணர்த்தலும் வல்லோர் ஆறே'

எனவரும் தொல்காப்பிய நூற்பா (1268) அசை இசையொடு தொடர்புடையது என்பதைக் குறிப்பிடுகிறது. 'அசைந்திசைக் கோடலின் அசையே' என்பதும் கருதத் தக்கது. ஆகவே, அசையில் வரும் ஒவ்வொரு எழுத்துக்கும் இசையளவில் ஓர் இடம் உண்டு எனலாம். அதாவது, 'அக்கிளை' என ஒரு சீர் வருமாயின், இச்சீரில் உள்ள 'க்' என்னும் எழுத்துக்கும் இசையளவில் ஓர் இடம் உண்டு; ஆகவே, இச்சீரின் முதலசையை 'அக்' என்னும் அளவில்தான் கொள்ள வேண்டுமேயொழிய, புணர்ச்சிக்கு முந்திய நிலையைக் (அ + கிளை) கருத்தில் கொண்டு, முதலசைக்குப் பொருள் உண்டு ( | அக் | → | அ | ), எனக் கொள்வது நேரியதாகத் தோன்றவில்லை. மேலும் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு அசைகளும் எழுத்து அல்லது எழுத்துகளின் அமைப்பு நிலைகளை நோக்கியே வகை செய்யப்படுகின்றன என்பதும் ஆழ்ந்து கருதத்தக்கது.

## 3. முடிவு

**3.1** இதுவரை கூறியவற்றால் அறிவன :

1. அசை, பொருள் பெற்று வருவதும் உண்டு; பொருள் அற்று வருவதும் உண்டு.

2. பொருள் பெற்று வரும் அசைகளுள்ளும், அவற்றிற்குரிய அசையளவிலான பொருள் சீர்

(அல்லது சொல்) அளவிலான பொருளொடு ஒன்றுதலும் உண்டு; ஒனறாமையும் உண்டு.

3. அசை இசையின் ஒரு கூறு; ஆகவே, அதில் வரும் ஒவ்வொரு எழுத்துக்கும் இசையளவில் ஓர் இடம் உண்டு.

4. எழுத்துகளின் அமைப்பு நிலைகளை நோக்கியே அசைகளுக்குப் பெயரிடப்பட்டுள்ளன. பொருள் நிலை நோக்கி அன்று.

3.2. ஆகவே, **அசைகள் பலவற்றிற்குப் பொருள் இருப்பது ஒரு சிறப்பாக வேண்டுமானால் கொள்ளலாம். ஆனால், எல்லா அசைகளுக்கும் பொருள் உண்டு என்றோ அசை பொருள் நோக்கு உடையது கொள்ள இயலவில்லை.**

## குறிப்பு

1. *ஆபிரகாம் அருளப்பன், தொல்காப்பிய யாப்பு, அருள் அச்சகம், பாளையங் கோட்டை,* (1968), *ப.* 15.

# 3. வெண்பாவில் ஓரசைச் சீர்கள்

## ஓர் ஆழ்வாய்வு

### *3.0* நோக்கம்

வெண்பாக்களில் ஓரசைச் சீர் எவ்வெவ்வாறு வரும், அதனுடைய இயல்புகள் யாவை என்பனவற்றைத் தொல்காப்பியம் திருக்குறள் என்னும் இரு நூல்களையும் கொண்டு ஆராய்வது இப்பகுதியின் நோக்கம்.

### *3.1* இயலசையும் உரியசையும்

**3.1.1** தொல்காப்பியம் அசைகளை இயலசை உரியசை என இரண்டாகப் பகுக்கின்றது.

**3.1.1.1** இயலசை நேர், நிரை என இரண்டாகப் பகுக்கப்படுகிறது. குறில் தனித்து வரல், குறில் ஒற்றடுத்து வரல், நெடில் தனித்து வரல், நெடில் ஒற்றடுத்து வரல் ஆகிய நான்கு அமைப்புகள் நேரசை. குறிலிணைந்து வரல், குறிலிணைந்து ஒற்றடுத்து வரல், குறில் நெடில் இணைந்து வரல், குறில் நெடில் இணைந்து ஒற்றடுத்து வரல் ஆகிய நான்கமைப்புகள் நிரையசை (தொல். 1261)

**3.1.1.2** இயலசையொடு இருவகை உகரமும் (குற்றியலுகரம், முற்றியலுகரம்) இணைந்து வரும் அமைப்புகளை உரியசை என்பர் (தொல். 1262). தனிக் குறிலான நேரசையொடு உகரம் இணைந்தால், குறிலிணைந்து வந்த நிரையசையே கிடைக்கும்

(தொல். 1263). ஆகலின், தனிக்குறில் தவிர்த்த மற்ற ஏழு அமைப்புகளொடும் உகரங்கள் இணைந்து வரும்.

3.1.1.3 நேரசை மூன்றொடும் இருவகை உகரமும் சேர்ந்த அமைப்பை **நேர்பு** என்பர்; நிரையசை நான்கொடும் இருவகை உகரமும் சேர்ந்த அமைப்பை **நிரைபு** என்பர்.

3.1.2 ஆக, மொத்தம் ஓரசைகள் நான்கு; எழுத்தமைப்பு வகைகள் 15. இவையேயன்றி, ஈரொற்றுகள் சேர்ந்தும் வருவதுண்டு.

3.1.3 சில வேளைகளில், உரியசைகள் ஒற்றொடு தோன்றி நிற்றலும் உண்டு (தொல். 1267). ஆனால் ஒற்று, தோன்றிய ஒற்றாக இருத்தல் வேண்டும்.

சான்றுகள் :

| | |
|---|---|
| நா**ணு**த்தரும் | (குறள். 902) |
| ஊ**ற்று**க்கோல் | (குறள். 415) |

## 3.2 ஈரசைச் சீர்கள்

3.2.1 நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு ஓரசைகளையும் கொண்டு, 16 வகையான ஈரசைச்சீர்கள் பிறக்கின்றன.

3.2.1. நேர், நிரை என்னும் ஈரசைகளின் சேர்க்கையால் பிறக்கும் நான்கு ஈரசைச்சீர்களையும் இயலசை மயக்கத்தானாகிய இயற்சீர் என்பர் (தொல். 1270).

3.2.1.2 உரியசை நின்று ஈற்றில் நேரசை இயைவதை உரியசை முதலாய நேரீற்றியற்சீர் எனலாம் (தொல். 1272). இவை நேர்பு நேர், நிரைபு நேர் என்னும் இருசீர்கள். தளை வழங்குங்கால், இவை முறையே நேர் நிரை, நிரைநிரை எனக் கொள்ளப்படும் (தொல். 1272).

1920



**3.2.1.3** இயலசையடுத்து உரியசை அமையும் நான்கு சீர்களும் உரியசையீற்று இயற்சீர்கள் ஆகும். இவையும் தளை கொள்ளுங்கால் நேர்நிரை, நிரைநிரை எனக் கொள்ளப்படும் (தொல். 1273).

**3.2.2** பதினாறு வகையான ஈரசைச்சீர்களுள் மேற் சுட்டிய பத்தும் இயற்சீர்கள்; ஏனைய ஆசிரிய உரிச் சீர்கள் (தொல். 1270, 1271).

**3.2.2.1** ஆசிரிய உரிச்சீர்கள் வெண்பாவில் வருவது இல்லை.

## *3.3 வெண்பா உரிச்சீர்*

**3.3.1** இயலசை மயக்கத்தானாகிய ஈரசைச்சீர்கள் நான்கின் ஈற்றில் நேரசை இயையப் பிறக்கும் நான்கு மூவசைச்சீர்களும் வெண்பா உரிச்சீர்கள் எனப்படும் (தொல். 1276); ஏனைய 60 சீர்களும் வஞ்சி உரிச்சீர்கள் (தொல். 1277).

## *3.4 ஈற்றடியும் ஈற்றுச்சீரும்*

**3.4.1** வெண்பாவின் ஈற்றடி முச்சீர்களைக் கொண்டது (தொல். 1329).

**3.4.2** ஈற்றடியின் ஈற்றுச்சீர் அசைச்சீர்களைப் பெற்று அமையும் என்பது தொல்காப்பியம் (தொல். 1330) அசைச்சீர் என்பது நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு சீர்களையும் கொண்டதாகும்.

சான்றுகள் :

| | | | |
|---|---|---|---|
| நேர் | — | தூண் | (குறள். 615) |
| நிரை | — | பழி | (குறள். 618) |
| நேர்பு | — | ஒற்று | (குறள். 587) |
| நிரைபு | — | உலகு | (குறள். 612) |
| | | அறிவு | (குறள். 423) |

3.4.3 வெண்பா ஈற்றடியின் ஈற்றயற்சீர், இயலசை மயக்கத்தானாகிய நேரீற்றியற்சீராயின், ஈற்றுச்சீர் நிரை நிரைபு என்னும் அசைகளுள் ஏதேனும் ஒன்றைச் சீராகப் பெற்று வரும் (தொல். 1331).

சான்றுகள் :

| | | | |
|---|---|---|---|
| நேர் நேர் நிரை | — | நீள விடல் | (குறள். 1302) |
| நிரை நேர் நிரை | — | அவர்பின் செலல் | (குறள். 1293) |
| நேர் நேர் நிரைபு | — | காண்கம் சிறிது | (குறள். 1301) |
| நிரை நேர் நிரைபு | — | அறிந்தென் புலந்து | (குறள். 1287) |

3.4.4 வெண்பா ஈற்றடியின் ஈற்றயற்சீர் இயலசை மயக்கத்தானாகிய நிரையீற்றியற்சீராயின், ஈற்றுச்சீர் நேர், நேர்பு என்னும் அசைகளுள் ஏதேனும் ஒன்றைச் சீராகப் பெற்று வரும் (தொல். 1332).

சான்றுகள் :

| | | | |
|---|---|---|---|
| நேர் நிரை நேர் | — | தீவினைப் பால் | (குறள். 209) |
| நிரை நிரை நேர் | — | பயன்தெரி வார் | (குறள். 104) |
| நேர் நிரை நேர்பு | — | ஏதிலார் மாட்டு | (குறள். 188) |
| நிரை நிரை நேர்பு | — | துடைத்தவர் நட்பு | (குறள். 107) |

3.4.5 மேற்சுட்டிய இரு அமைப்பு வரையறைகளைத் தவிர்த்துப் பிறவற்றைத் தொல்காப்பியம் சுட்டவில்லை. தொல்காப்பியம் சுட்டாத சில அமைதிகள் திருக்குறளில் காணப்படுகின்றன.

3.4.5.1 உரியசை முதலாகிய நேரீற்றியற்சீர் ஈற்றயற் சீராக நிற்க, ஈற்றுச்சீர் நேர், நேர்பு என்னும் அசைகளுள் ஒன்றைச் சீராகப் பெற்று வருதல்.

சான்றுகள் :

| | | | |
|---|---|---|---|
| நேர்பு நேர் நேர்பு | — | சென்றுவந் தற்று | (குறள். 1058) |
| நிரைபு நேர் நேர்பு | — | நிரப்புக்கொான் றாங்கு | (குறள். 532 ) |
| நேர்பு நேர் நேர் | — | நீடுவாழ் வார் | (குறள். 3 ) |

3.4.5.2 உரியசையீற்று இயற்சீர்கள் ஈற்றயற்சீர் களாக நிற்க, ஈற்றுச்சீர் நேர், நேர்பு என்னும் அசை களுள் ஒன்றைச் சீராகப் பெற்று வருதல்.

சான்றுகள் :

நேர் நிரைபு நேர்பு—சொல்லிழுக்குப் பட்டு (குறள். 127)
நிரை நேர்பு நேர்பு—புடையார்க்கு நன்கு (குறள். 534

இவ்விரு அமைப்புகளே குறளில் உள்ளன.

3.4.5.3 வெண்பா உரிச்சீர் ஈற்றயற்சீராக நிற்க, ஈற்றுச்சீர் நேர், நேர்பு என்னும் அசைகளுள் ஒன்றைச் சீராகப் பெற்று வருதல்.

சான்றுகள் :

வெண்சீர் நேர் —வளங்குன்றிக் கால் (குறள். 127)
வெண்சீர் நேர்பு —வைப்பிற்கோர் வித்து (குறள். 24 )

## 3.5 ஈற்றுச்சீரல்லா ஓரசைச்சீர்கள்

3.5.1 பாக்களில் இசை குன்றா வகையில் (ஈற்றுச்சீர் அல்லாத பிற இடங்களிலும்) ஓரசைச்சீர் வருவதுண்டு எனத் தொல்காப்பியம் வரையறுக்கின்றது (தொல். 1284).

3.5.2 வெண்பாவில், ஈற்றுச்சீரல்லாத பிற இடங் களில் வரும் ஓரசைச் சீர்கள் உரியசைச்சீர்களே.

3.5.3 வெண்பாவில் வரும் உரியசைச் சீர்களைத் தளை வழங்குகையில், நேரீற்றியற்சீர்களாகக் கொள்ள வேண்டும் (தொல். 1285).

3.5.4 திருக்குறளில் முதற்சீர் முதல் ஆறாம் சீர் வரையிலும் தனித்தனியே ஓரசைச்சீர்கள் வந்துள்ளன. அவற்றின் அமைப்பு நிலைகள் ஆராய்தற்குரியன.

## 3.6 ஓரசைச் சீர்முன் ஓரசைச் சீர்

3.6.1 ஈற்றயற்சீர் நேர்பசையாகி, ஈற்றுச்சீர் நிரையசையாதல்.

சான்று :

பீடு நடை (குறள். 59)

3.6.2 ஈற்றயற்சீர் நேர்பசையாகி, ஈற்றுச்சீர் நிரைபசையாதல்.

சான்று :

அன்று பெரிது (குறள். 1092)

3.6.2.1 இந்த அமைப்பு வெண்பாவில் பிற இடங்களிலும் வந்துள்ளது.

சான்று :

போழ்து சிறிது (குறள். 412)

3.6.3 ஈற்றயற்சீர் நிரைபசையாகி, ஈற்றுச்சீர் நிரையசையாதல்.

சான்று :

ஒருங்கு கெடும் (குறள். 1056)

3.6.4 ஈற்றயற்சீர் நிரைபசையாகி, ஈற்றுச்சீர் நிரைபசையாதல். (இவ்வமைப்பு ஈற்றில் இல்லை. தொடக்கத்தில் வந்துள்ளது.)

சான்று :

பிணிக்கு மருந்து (குறள். 1102)

## 3.7 ஓரசைச்சீர் முன் இயற்சீர்

3.7.1 நேர்பசை முன் நிரை முதலாகிய இயலசை மயக்கம்.

சான்றுகள் :

நேர்பு நிரைநேர் — ஈண்டு முயலப் (குறள். 265)
நேர்பு நிரைநிரை — பாடு பெறுதியோ (குறள். 1237)

3.7.2 நேர்பசை முன் நிரை முதலாகிய உரியசையீற்று இயற்சீர். இவ்வமைப்புகள் குறளில் இல்லை.

3.7.3 நேர்பசை முன் நிரைபு முதலாகிய நேரீற்றியற் சீர். இவ்வமைப்பும் குறளில் இல்லை.

3.7.4 நிரைபசை முன் நிரை முதலாகிய இயலசை மயக்கம்.

சான்றுகள் :

நிரைபு நிரைநேர் — பரந்து கெடுக (குறள். 1062)
நிரைபு நிரைநிரை — நிலத்து மறைமொழி (குறள். 28 )

3.7.5 நிரைபசை முன் நிரை முதலாகிய உரியசையீற்று இயற்சீர்.

சான்றுகள் :

நிரைபு நிரை நேர்பு — விடத்துச் சினந்தீது (குறள். 302)

நிரைபு நிரை நிரைபு — அறிந்து கடைப்பிடித்து (குறள். 944)

3.7.6 நிரைபசை முன் நிரைபு முதலாகிய நேர்பீற்றியற்சீர்.

சான்று :

நிரைபு நிரைபு நேர் — இருந்து தமதுபாத் (குறள். 1107)

## 3.8 ஓரசைச்சீர் முன் வெண்சீர்

3.8.1 நேர்பசை முன் நிரை முதல் வெண்சீர் வரும்.

சான்று :

நேர்பு வெண்சீர் — சார்பு கெடஒழுகின் (குறள். 359)

3.8.2 நிரைபசை முன் நிரை முதல் வெண்சீர் வரும்.

சான்று :

நிரைபு வெண்சீர் — விரைந்து தொழில்கேட்கும் (குறள். 648)

## 3.9 இயற்சீர் முன் அசைச்சீர்

3.9.1 இயலசை மயக்கத்தானாகிய நேர்பீற்றியற்சீர் முன் நிரைபசைச் சீர் வரும்.

சான்று :

சூழ்ச்சி முடிவு (குறள். 671)

3.9.2 இயலசை மயக்கத்தானாகிய நிரைபீற்றியற்சீர் முன் நேர்பசைச் சீர் வரும்.

சான்று :

கொண்டவன் கேடு (குறள். 307)

3.9.3 உரியசை முதலாகிய நேரீற்றியற்சீர் முன் நேர் பசை வரும்.

சான்று :

ஏறுபோல் பீடு (குறள். 59)

3.9.4 நிரைபீற்றியற்சீர் முன் நேர்பசை வரும்.

சான்று :

திறனறிந்து தேர்ந்து (குறள். 441)

## *3.10 வெண்சீர்கள் முன் அசைச்சீர்*

**3.10.1** வெண்சீர்களின் முன் நேர்பசை வந்து ஒன்றும். இது நான்கு வகை அமைப்புகளைக் கொண்டது.

சான்று :

உறுபொருளு முல்கு (குறள். 756)

## *3.11 தொகுப்புரை*

இதுவரை கண்டவற்றால் அறிவன

**3.11.1** வெண்பாவின் ஈற்றில் நேர், நிரை, நேர்பு, நிரைபு என்னும் நான்கு வகை அசைச்சீர்களும் வரும்.

**3.11.2** வெண்பாவின் ஈற்றயற்சீர், 1. இயலசை மயக்கத்தானாகிய நிரையீற்றியற்சீர், 2. உரியசை முதலாகிய நேரீற்றியற்சீர் 3. உரியசையீற்று இயற்சீர், 4. வெண்சீர் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பெற்று வரின், ஈற்றுச்சீர் நேர் அல்லது நேர்பசைச்சீராக அமையும்.

**3.11.3** வெண்பாவின் ஈற்றயற்சீர், 1. இயலசை மயக்கத்தானாகிய நேரீற்றியற்சீர், 2. உரியசைச்சீர் ஆகியவற்றுள் ஏதேனும் ஒன்றைப் பெற்றுவரின், ஈற்றுச் சீர் நிரை அல்லது நிரைபசைச்சீராக அமையும்.

**3.11.4** ஈற்றுச் சீராக மட்டுமன்றி, பிற சீர்கள் நிற்குமிடங்களிலும் உரியசையாகிய ஓரசைச்சீர்கள் வரும்; ஓசை சிதையாமை வேண்டும். திருக்குறளில், பிறசீர்கள் நிற்கும் எல்லா இடங்களிலும் ஓரசைச் சீர்கள் வந்துள்ளன.

**3.11.5** உரியசைச் சீர்களைத் தளை கொள்ளும் போது இயலசை மயக்கத்தானாகிய நேரீற்றியற் சீர்களாகக் (நேர் நேர், நிரை நேர்) கொள்ள வேண்டும்.

3.11.6 ஓரசைச் சீர் முன் ஓரசைச் சீர்கள் வருவதுண்டு. அந்நிலையில், உரியசைகளின் முன் நிரை (ஈற்றில் மட்டும்), நிரைபு என்னும் அசைகள் வரும்.

3.11.7 ஓரசைச் சீர்முன் இயற்சீர் வரும் அமைப்பில், உரியசைச் சீர்களின் முன், 1. நிரை முதலாகிய இயலசை மயக்கச்சீர், 2. நிரைபு முதலாகிய நேர்பீற்று இயற்சீர், 3. நிரை முதலாகிய உரியசையீற்று இயற்சீர் ஆகியவை வந்தமையும்.

3.11.8 ஓரசைச்சீர் முன் வெண்சீர் வரும் அமைப்பில், உரியசைச் சீர் முன் நிரை முதலாகிய வெண்சீர்கள் மட்டுமே வந்தமையும்.

3.11.9 இயற்சீர் முன் அசைச்சீர் வரும் அமைப்பில், இயலசை மயக்கத்தானாகிய நேரீற்றியற்சீர் முன் நிரை பசையும், பிற இயற்சீர்களின் முன் நேர்பசையும் வந்தமையும்.

3.11.10 வெண்சீர் முன் அசைச்சீர் வந்தமையும் அமைப்பில், வெண்சீர் முன் நிரைபசை மட்டும் வந்த மையும்.

குறிப்பு

1. *க. வெள்ளைவாரணன், தமிழ் இலக்கிய வரலாறு— தொல்காப்பியம், அண்ணாமலைப் பல்கலைக் கழகம், அண்ணாமலை நகர்,* (1957), *ப.* 196.

# 4. திருக்குறளில் தலையாகு எதுகைகள்

## 4.1 எதுகை

**4.1.1** செய்யுளில், ஈரடிகளின் முதல் சீர்களில் அல்லது ஓர் அடிக்குள்ளேயே உள்ள சீர்களில், முதலெழுத்து ஓசையில் அளவு ஒத்திருக்க இரண்டாம் எழுத்து ஒன்றி வருவது எதுகை.

**4.1.1.1** ஈரடிகளின் முதல் சீர்களிடையே அமையும் எதுகை, அடி எதுகை.

**4.1.1.2** ஓர் அடிக்குள்ளேயே முதல் சீர்க்கும் ஏனைய சீர்களுக்கும் இடையே எதுகைகள் அமையின், அவை எதுகை விகற்பங்கள். (ஓரடியின் கடைசிச் சீரை அடிப்படையாகக் கொண்டு எதுகையின் விகற்பங்களை வரையறுப்பதும் உண்டு. அஃது சிறப்பு இன்மையின், இவ்வாய்வின் கூறாக அமையவில்லை.) அவற்றின் பெயர்களும் அமைப்பு நிலைகளும் வருமாறு :

| | | | | |
|---|---|---|---|---|
| இணை எதுகை | ↑ 1 | ↑ 2 | 3 | 4 |
| பொழிப்பு எதுகை | ↑ 1 | 2 | ↑ 3 | 4 |
| ஒரூஉ எதுகை | ↑ 1 | 2 | 3 | ↑ 4 |
| கூழை எதுகை | ↑ 1 | ↑ 2 | ↑ 3 | 4 |

| | | | | |
|---|---|---|---|---|
| மேற்கதுவாய் எதுகை | ↑ 1 | 2 | ↑ 3 | ↑ 4 |
| கீழ்க்கதுவாய் எதுகை | ↑ 1 | ↑ 2 | 3 | ↑ 4 |
| முற்று எதுகை | ↑ 1 | ↑ 2 | ↑ 3 | ↑ 4 |

## *4.2 தலையாகு எதுகை*

4.2.1 எதுகைத் தொடையில் இரண்டாம் எழுத்து (அல்லது முதலிரு எழுத்துகள்) ஒன்றி வருவதனை **இடையாகு எதுகை** என்பர். எடுத்துக் காட்டுகளாக,

'ஈன்ற பொழுதின் பெரிதுவக்கும் தன்மகனைச்
சான்றோன் எனக்கேட்ட தாய்' (குறள். 69)

'**இன்**னா திரக்கப் படுதல் இரந்தவர்
**இன்**முகம் காணும் அளவு' (குறள். 224)

என்னும் குறள்களைக் கொள்ளலாம்.

4.2.2 எதுகைத் தொடையில் முதல் எழுத்துத் தவிர்த்த ஏனைய எழுத்துகள் அல்லது சீர் முழுவதும் உள்ள எழுத்துகள் ஒன்றி வருவதனைத் **தலையாகு எதுகை** என்பர். எடுத்துக் காட்டுகளாக,

'தா**ளாண்மை** இல்லாதான் வே**ளாண்மை** பேடிகை
வா**ளாண்மை** போலக் கெடும்' (குறள். 614)

'**செயற்கரிய** செய்வார் பெரியர் சிறியர்
**செயற்கரிய** செய்கலா தார்' (குறள். 26)

என்னும் குறள்களைக் கொள்ளலாம்.

4.2.3 இடையாகு எதுகை, தலையாகு எதுகை ஆகிய வற்றிற்கு இலக்கணவாணர்கள் தரும் விளக்கங்களை ஒப்பு நோக்கின் ஓர் ஐயம் எழுகின்றது. எதுகைத்

தொடையில், முதல் எழுத்துத் தவிர்த்த ஏனைய எழுத்துகள் அல்லது சீர் முழுவதும் உள்ள எழுத்துகள் ஒன்றாமல், இரண்டாம் எழுத்தொடு அல்லது முதலிரு எழுத்துகளொடு அடுத்துள்ள எழுத்து அல்லது எழுத்துகள் ஒன்றிவரின் அவற்றை எவ்வகை எதுகை களாகக் கொள்வது—வேறு வகையாகச் சொல்வதானால் இடையாகு, தலையாகு எதுகைகளுக்குரிய வரையறை களுக்கு இடைப்பட்ட நிலையில் ஒப்புமைகள் காணின் அவற்றை எவ்வகை எதுகைகளாகக் கொள்வது — என்பதே அந்த ஐயம்.

4.2.4 தலையாகு இடையாகு எதுகைகளுக்கிடையே மேற்சுட்டிய இடைவெளி இருப்பதனால், இந்த ஆய்வில், பின்வரும் வரையறை மேற்கொள்ளப்படுகின்றது.

மூவசைச் சீரில் முழுவதும் ஒத்தவை, முதலெழுத்துத் தவிர்த்த ஏனைய எழுத்துகள் ஒத்தவை ஆகியவற்றொடு, முதலிரு அசைகள் முழுவதும் ஒத்தவைகளும் (பெரும் பான்மை ஒப்புமை என்பதைக் கருத்தில் கொண்டு) தலையாகு எதுகைகளாகக் கொள்ளப்பட்டு உள்ளன; ஏனைய இடையாகு எதுகைகளாகக் கொள்ளப்பட்டு உள்ளன.

மூவசைச் சீர்களுள் ஈரசைகள் முழுவதும் உள்ள அல்லது முதலெழுத்துத் தவிர்த்த ஏனைய எழுத்துகள் ஒத்தவைகளே தலையாகு எதுகைகளாகக் கொள்ளப் படுவதால், ஒத்தத் தன்மை நோக்கி, ஈரசைச் சீர்களுள் முழுவதும் ஒத்தவைகள் அல்லது முதலெழுத்துத் தவிர்த்த ஏனைய எழுத்துகள் ஒத்தவைகள் மட்டுமே தலையாகு எதுகைகளாகக் கொள்ளப்பட்டு உள்ளன; முத லெழுத்துத் தவிர, பிற எந்த ஓர் எழுத்து மாற்றம் ஏற்படினும் அவை இடையாகு எதுகைகளாகவே கொள்ளப்பட்டு உள்ளன.

## 4.3 திருக்குறளில் தலையாகு எதுகைகள்

4.3.1 திருக்குறளில் 452 குறட்பாக்களில் - அதாவது ⅓ பங்குக்கும் சற்றுக் கூடுதலான (33. 98%) குறட்பாக்களில் தலையாகு எதுகைகள் இடம் பெற்று உள்ளன. இவற்றுள், இரு குறள்களில் மும்மூன்று தலையாகு எதுகைகளும், ஆறு குறள்களில் இரண்டிரண்டு தலையாகு எதுகைகளும் இடம்பெற்று உள்ளன. மொத்தத்தில் திருக்குறளில் 462 இடங்களில் தலையாகு எதுகைகள் அமைந்து உள்ளன. இவற்றுள், அடி எதுகைகள் 255; ஒரூஉ எதுகைகள் 189; இணை எதுகைகள் 15; பொழிப்பு எதுகைகள் 2; மேற்கதுவாய் எதுகை ஒன்று.

4.3.2 மேற்காட்டிய புள்ளி விவரங்களால் அறியப் படுவன இரண்டு: ஒன்று, தலையாகு எதுகைகள் திருக்குறளில் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றுள்ளன; இரண்டு, தலையாகு எதுகைகளுள்ளும் அடி எதுகையும் ஒரூஉ எதுகையும் சிறப்பிடம் பெற்றுள்ளன. அடி எண்ணிக்கையளவில் நோக்கும்போது ஏறத்தாழ 17 விழுக்காடு அளவிற்கான அடிகளில் தலையாகு எதுகைகள் இடம் பெற்றுள்ளன. சங்கத் தொகை நூல்களில் மிகமிகக் குறைந்த விழுக்காட்டளவிற்கே தலையாகு எதுகைகள் இடம் பெற்றுள்ளன. எனவே, **தலையாகு எதுகைகளைப் பயன்படுத்துவதில் சங்க நூல்களிலேயே குறள் ஒரு தனிச் சிறப்பிடம் பெறுகின்றது.**

4.3.3 திருக்குறளில் இடம் பெற்றுள்ள தலையாகு எதுகைகளுள், அறத்துப்பாலில் இடம் பெறுவன 154 [40. 52%]; பொருட்பாலில் இடம் பெறுவன 239 [34.3%]; காமத்துப்பாலில் இடம் பெறுவன 69 [27.6%]. இப்புள்ளி விவரங்களைக் கொண்டு ஒரு முடிவுக்கு வரமுடியாது. ஏனைய இருபால்களினும் அறத்துப்பாலில் கவிநயம் கூடுதல் என்றும் கொள்ள முடியாது; ஏனெனில், கவிநயம் என்பது தலையாகு எதுகையை மட்டும் உள்ளடக்கியது அன்று.

## 4.4 தலையாகு எதுகைகளில் இரண்டாம் எழுத்துகள்

**4.4.1** எதுகைக்கு அடிப்படையாக அமைவன இரண்டாம் எழுத்துகளே. திருக்குறளில் இடம்பெற்றுள்ள தலையாகு எதுகைகளின் இரண்டாம் எழுத்துகளாக வல்லினம் மெல்லினம் இடையினம் ஆகிய மூவின எழுத்துகளும் இடம் பெற்று உள்ளன. அவற்றுள் இடையின எழுத்துகள் 204 இடங்களிலும், வல்லின எழுத்துகள் 146 இடங்களிலும், மெல்லின எழுத்துகள் 112 இடங்களிலும் இடம் பெற்று உள்ளன. அவற்றின் வகை தொகை — எண்ணிக்கை நிரல் அடைவு வருமாறு :

| | | |
|---|---|---|
| | | ன (72) |
| ற (71) | | |
| | ல (58) | |
| | ர (56) | |
| ட (34) | | |
| | ய (29) | |
| | | ண (28) |
| க (27) | | |
| | ள (26) | |
| | ழ (24) | |
| | வ (10) | |
| த (8) | | |
| | | ம (7) |
| ச (3) ப (3) | | ஞ (3) |
| | | ங (2) |

**4.4.2** சங்க இலக்கியங்களில் இடம் பெறும் எதுகைகளின் இரண்டாம் எழுத்துகள் பெரும்பான்மையும்

நுனியண்ண ஒலிகளாகவே அமைந்துள்ளன என்பர். திருக்குறளிலும், நுனியண்ண ஒலிகளும் [ற, ட, ன, ண, ர, ல, ள, ழ] பிற ஒலிகளும் 4 : 1 என்னும் விகிதத்திலேயே உள்ளன. எனினும், கலித்தொகை தவிர்த்த ஏனைய சங்க இலக்கியங்களில் றகர இன ஒலிகள் எதுகைகளின் இரண்டாம் எழுத்துகளாக மிக அருகியே வந்திருக்க, திருக்குறளில் வரும் தலையாகு எதுகைகளில் மட்டும் ஏறத்தாழ 15. 4% அளவிற்கு அவை இரண்டாம் எழுத்துகளாக இடம் பெற்றுள்ளன. அது போன்றே, சங்க இலக்கியங்களில் மிக அருகியே எதுகைகளின் இரண்டாம் எழுத்துகளாக இடம் பெற்றுள்ள யகர, ககர இன ஒலிகள் திருக்குறள் தலையாகு எதுகைகளில் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெற்றுள்ளன. றகர இன ஒலிகள் பயின்று வருவதற்குக் குறிப்பிட்ட சில சொல்லாட்சிகள் காரணம் எனலாம். ஆனால், யகர, ககர இன ஒலிகள் பயின்று வருவதற்குக் குறிப்பிட்ட சில சொல்லாட்சிகளே காரணம் எனக் கூற முடியாது.

4.4.3 திருக்குறள் தலையாகு எதுகைகளுள் இரண்டாம் எழுத்துகளாக அமையும் தனி எழுத்துகள் என்ற அளவில் நோக்கின், எண்ணிக்கை அளவில் முதல் பத்து இடங்களில் அமையும் எழுத்துகளின் அடைவு வருமாறு :

| | | |
|---|---|---|
| ன் (39) | | |
| | | ரு (35) |
| | ற (31) | |
| ல் (23) | | |
| | ல (20) | |
| ற் ண் (17) | | |
| | ள (16) | |
| | க (15) | ளை (15) |
| | ய (14) | |
| ய் (13) | | |

462 தலையாகு எதுகைகளுள் 5%-க்கும் அதிகமான எதுகைகளில் இரண்டாம் எழுத்துகளாக வருவன ன், ரு, ற என்னும் எழுத்துகளே. அவற்றுள் ன் என்னும் எழுத்து, கூடுதலான இடங்களில் வருவதற்குக் காரணமாக அமைவன இன், நன்(ல்), தன் என்னும் அடைகள்; ரு என்னும் எழுத்து, கூடுதலான இடங்களில் வருவதற்குக் காரணமாக அமைவன அருள், பொருள், இருள், ஒரு, இரு என்னும் சொற்களும் அடைகளும்; ற என்னும் எழுத்து, கூடுதலான இடங்களில் வருவதற்குக் காரணமாக அமைவன அறம், இறந்தார், துறந்தார் முதலிய சொற்கள். மேற்குறிப்பிட்டவற்றுள் பெரும் பாலான சொற்களும் அடைகளும் திருக்குறளில் பயின்று வருவன என்பது குறிப்பிடத்தக்கது.

## 4.5 பயின்றுவரும் ஒலிநிலை மடக்குகள்

**4.5.1** திருக்குறளில் ஒரு சில ஒலிநிலை மடக்குகள் ஒரே அதிகாரத்தில் அல்லது பல்வேறு அதிகாரங்களில் பயின்று வந்துள்ளன. ஓர் அதிகாரத்தில் பயின்றுவரும் ஒலிநிலை மடக்குகளில் குறிப்பிடத் தக்கவை அளவு—களவு, கனவு — நனவு என்பன; இரண்டு அதிகார அளவில் பயின்று வரும் ஒலிநிலை மடக்குகளில் குறிப்பிடத்தக்கவை அறம்-புறம், குடி-மடி, மனம்-இனம், வாழ்-வீழ் என்பன; இரண்டிற்கு மேற்பட்ட அதிகாரங் களில் பயின்று வரும் ஒலிநிலை மடக்குகளில் குறிப்பிடத் தக்கவை அருள்-பொருள், அற-பிற, இன்பம்-துன்பம், எனை-வினை, பயன்-நயன், முகம்-அகம் என்பன. இவற்றுள், அருளும் பொருளும் பல்வேறு சூழல்களில் தொடர்புபடுத்திப் பேசப்படுவதால், அருள்-பொருள் என்னும் ஒலிநிலை மடக்கே ஏனையவற்றினும் சற்றே கூடுதலான இடங்களில் (10) பயின்று வந்துள்ளது.

**4.5.1.1** பயின்று வரும் ஒலிநிலை மடக்குகள் நூலாசிரியரின் விருப்பக் கூறுகளாக அமைவதனால், அவை ஓர் ஆசிரியரை இனங்காண உதவுகின்றன.

ஒரு சில நேரங்களில், பழைய ஓலைச் சுவடிகளைப் படியெடுக்கும் நிலையில், இம் மடக்குகள் ஓரளவு துணை செய்கின்றன. அருகிவரும் ஒலிநிலை மடக்குகளினும், பயின்றுவரும் இவ்வொலிநிலை மடக்குகளால், குறடி களை நினைவு கொள்வதில் உள்ள எளிமை சற்றுக் கூடுதல் ஆகின்றது.

## 4.6 இருசீர் அளவில் ஒலிநிலை மடக்குகள்

**4.6.1** தலையாகு எதுகை பெற்றுவரும் குறள்களுள் 21 குறள்கள் இருசீர் அளவில் ஒலிநிலை மடக்குகளைப் பெற்று விளங்குகின்றன.

சான்றுகள் :

'**அடுத்தது காட்டும்** பளிங்குபோல் நெஞ்சம்
**கடுத்தது காட்டும்** முகம்' (குறள். 706)

'**செயிரின் தலைப்பிரிந்த** காட்சியார் உண்ணார்
**உயிரின் தலைப்பிரிந்த** ஊன்' (குறள். 258)

**4.6.2** ஐந்து குறள்களில், சீர்களின் முதல் ஒலிகள் மட்டும் வேறுபட்டு, இருசீர் அளவில் ஒலிநிலை மடக்குகள் அமைந்துள்ளன.

சான்று :

'**பொய்யாமை பொய்யாமை** ஆற்றின் அறம்பிற
**செய்யாமை செய்யாமை** நன்று' (குறள். 297)

இருசீர் அளவிலான ஒலிநிலை மடக்குகள் அனைத்தும் அடி எதுகைக் கூறுகளாகவே உள்ளன.

**4.6.3** ஒருசீர் ஒலிநிலை மடக்குகளினும் இவை ஒலி இன்பம், நினைவு கொளற்கு எளிமை ஊட்டல், ஈர்ப்புத் திறன் ஆகிய பண்புகளைக் கூடுதலாகப் பெற்றுள்ளன. இவ்வகை அமைப்பில் ஒரே சொல் இருவேறு பொருள்தரும் நிலையிலும் அமைந்துள்ளது. சான்றாக,

*'இறந்தார் இறந்தார் அனையர் சினத்தைத்*
*துறந்தார் துறந்தார் துணை'* (குறள். 310)

என்னும் குறளில் வரும் இருசீர் ஒலிநிலை மடக்குகளைக் கொள்ளலாம்.

## 4.7 புதிய சொல்லாக்கங்கள்

**4.7.1** திருக்குறளில் இடம் பெற்று உள்ள தலையாகு எதுகை அமைப்புகளில், பல புதிய [சங்க நூல்களில் இடம் பெறாத] சொல்லாக்கங்களைக் காண முடிகின்றது. சான்றாக, ஆண்மை என்னும் சொல்லை அடிப்படையாகக் கொண்டு இல்லாண்மை, மடியாண்மை, வாளாண்மை என்னும் சொற்கள் ஆக்கம் பெற்று உள்ளதைக் கொள்ளலாம். இவை முறையே நல்லாண்மை (குறள். 1026), குடியாண்மை (குறள். 609), தாளாண்மை (குறள். 614) என்னும் முதல் சீர்களுக்குத் தக அமைந்தவைகளாகும்; (இவற்றுள்ளும், நல்லாண்மை, குடியாண்மை என்பனவும் குறளில் காணும் புதிய சொல்லாக்கங்களே.) இவற்றைப் போலவே, கள்ளாமை, (குறள். 281), பொன்றாமை (குறள். 886), பேணாமை (குறள். 833), வழுக்காமை (குறள். 536), வெஃகாமை (குறள். 178), பொருளாட்சி (குறள். 252) முதலாய பல்வேறு சொல்லாக்கங்கள் குறளில் புதியனவாக இடம் பெற்று உள்ளன.

**4.7.2** தலையாகு எதுகைகளில், 'சுற்றத்தால்' என்னும் முதல் சீருக்குப் 'பெற்றத்தால்' என்னும் சீர் அடி எதுகையமைப்பில் இடம் பெற்று உள்ளது (குறள். 524). இச் சொல்லாக்கம் குறித்துப் பரிமேலழகர்,

> 'பெற்ற' என்பதனுள் அகரமும் 'அதனான்' என்பதனுள் அன் சாரியையும் தொடை நோக்கி விகாரத்தால் தொக்கன'

எனக்கூறி இருப்பது கருதத்தக்கது. இவ்வாறு, எதுகை அமைப்பு நோக்கிச் சொற்களின் சேர்க்கையில் மாற்றம் செய்து புதிய சொல்லாக்கங்களை உருவாக்கும் உத்தியையும் வள்ளுவரிடம் காண முடிகின்றது.

4.7.3 பிறன்மனைவி என்பதைக் குறிப்பிடத் 'தெளிந்தாரில்' (குறள். 143), 'பிறனியலாள்' (குறள். 147), 'பிறன் வரையாள்' (குறள். 150) என்னும் வெவ்வேறு புதிய சொல்லாட்சிகளை வள்ளுவர் பயன்படுத்துகின்றார். ஒரு பொருள் பன்மொழிகளாக வள்ளுவர் பயன்படுத்தும் இப்புதிய சொல்லாட்சிகள், முறையே 'விளிந்தாரின்', 'அறனியலான்', 'அறன் வரையான்' என்னும் முதல் சிர்களுக்குத் தக நான்காம் சீரில் அமையும் சொல்லாட்சிகள். எதுகை அமைப்பு நோக்கி, ஒரே பொருளுக்கு வெவ்வேறு சொல்லாட்சிகளை வள்ளுவர் உருவாக்குவதற்கு இவை தக்க சான்றுகளாக அமைகின்றன.

4.7.4 எதுகை அமைப்புகளுக்குத் தக முன் ஒட்டுகளை அமைத்துப் புதிய சொல்லாக்கங்களையும் வள்ளுவர் உருவாக்கி உள்ளார். சான்றுகளாக, 'உறு பொருள்' என்பதற்குத் 'தெறுபொருள்' என்பதையும் (குறள். 756), 'சிறுபடையான்' என்பதற்கு 'உறுபடையான்' என்பதையும் அடி எதுகைகளாக அமைத்திருப்பதைக் கொள்ளலாம்.

4.7.5 'துனியரும்பி' (குறள். 1223), 'வில்வணக்கம்' (குறள். 817), 'நகை மொக்குள்' (குறள். 1274) முதலிய கவிநயம் மிக்கத் தொடர்களும் தலையாகு எதுகை அமைப்பு நோக்கி வள்ளுவரால் புதியனவாக உருவாக்கப்பட்டனவே.

4.7.6 இவ்வாறு, தலையாகு எதுகை அமைப்பு நோக்கி, வள்ளுவரால் உருவாக்கப்பட்டுள்ள புதிய சொல்லாக்கங்கள், நடை மாற்றத்திற்குக் காரணங்களாக

அமைவதொடு, தமிழுக்குப் புதிய விருந்துகளாக அமைந்து, வள்ளுவரின் தமிழ் உள்ளத்தையும் அவர் தமிழ் மொழிக்கு ஆற்றிய தொண்டையும் வெளிப்படுத்து கின்றன.

## 4.8. தொடர் அமைப்பு மாற்றம்

**4.8.1** பல்வேறு சொல்—சொற்றொடர் மாற்றங்களுக் கும் ஆக்கங்களுக்கும் காரணமாக அமையும் தலையாகு எதுகைகள், தொடர் அமைப்பு மாற்றங்களுக்கும் காரண மாக இருந்தல் கூடுமோ என்ற ஐயம் ஆய்வுலகில் எழுவது இயற்கை. இந்த ஐயத்திற்குப் பின்வரும் மூன்று குறள்களைக் கொண்டு விடை காணலாம்.

'செயற்கரிய செய்வார் பெரியர்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்' (குறள். 26)

'பணியுமாம் என்றும் பெருமை; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து' (குறள். 978)

'அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்
பெருமை முயற்சி தரும்' (குறள். 611)

என்னும் மூன்று குறள்களையும் முறையே,

பெரியர் செயற்கரிய செய்வார்; சிறியர்
செயற்கரிய செய்கலா தார்.
பெருமை பணியுமாம் என்றும்; சிறுமை
அணியுமாம் தன்னை வியந்து.
அருமை உடைத்தென் றசாவாமை வேண்டும்;
முயற்சி பெருமை தரும்.

என மாற்றியும் அமைக்கலாம். இவ்வாறு அமைப்பதால் தொடர் அமைப்பில் பிழையோ பொருள் சிதைவோ தளை சிதைவோ ஏற்படவில்லை: மாறாகத் திருக்குறளில் காணும் தொடர் அமைப்புகளிலும், புதியனவாக மாற்றி அமைத்துள்ள தொடர் அமைப்புகள் நீரோட்டமான நடையும் பொருத்தமும் பெற்றே விளங்குகின்றன.

முன்னர்ச் சுட்டிய மூன்று குறள்களையும் ஆழ்ந்து நோக்கும்போது, வள்ளுவர் கொண்ட தொடர் அமைப்புகளுக்குத் தலையாகு எதுகைகள் காரணமாக இருப்பது தெள்ளிதின் புலனாகும். எனவே, **திருக்குறளில் வரும் தலையாகு எதுகைகள் (பேரளவு இல்லையெனினும் ஓரளவேனும்) தொடர் அமைப்புகளில் மாற்றத்தை உருவாக்கி ஆசிரியரின் நடை மாற்றத்துக்குக் காரணமாக உள்ளன எனத் துணியலாம்.**

## *4.9* முடிவுரை

4.9.1 தொடை அமைப்புகளுக்குள்ளேயே பெரும்பாலான தொடை வகைகளையும் தன்னுள் அடக்கிய தனிச் சிறப்புக்கு உரியது தலையாகு எதுகை. இத்தொடை அமைப்புச் சங்க நூல்களில் அருகியே இடம் பெற்றுள்ளது; ஆனால், குறளில் குறிப்பிடத்தக்க சிறப்பிடம் பெற்றுள்ளது.

4.9.2 தலையாகு எதுகைகளைப் பாடலில் மேற்கொள்ள வேண்டும் என்னும் எவ்வகைக் கட்டுப்பாடும் இல்லா நிலையில் அவற்றை வள்ளுவர் மிகுதியாகப் பயன்படுத்தி இருப்பது அவருடைய விருப்ப நிலையையே காட்டுகின்றது; அந்த விருப்பம், புதிய சொல்லாக்கங்களை உருவாக்கும் நிலைக்கும், தலையாகு எதுகை அமைப்புக் கருதித் தொடர் அமைப்புகளை மாற்றி அமைக்கும் அளவிற்கும் சென்றுள்ளது.

4.9.3 வள்ளுவரின் விருப்பக் கூறாக விளங்கும் தலையாகு எதுகைகளில் காணும் ஒரு சீர் ஒலிநிலை மடக்குகளும் இரு சீர் ஒலிநிலை மடக்குகளும் ஒலி இன்பம், நினைவு கொள்வதில் எளிமை ஊட்டல், ஈர்க்கும் திறன் ஆகிய பண்புகளைக் கூடுதலாகப் பெற்றுள்ளன. அவற்றுள், பலமுறை பயின்றுவரும் ஒலிநிலை மடக்குகள் ஆசிரியரை இனங்காணவும் உதவுகின்றன.

4.9.4 மொத்தத்தில் தலையாகு எதுகைகள் ஆசிரியரின் நடை மாற்றத்துக்குக் காரணங்களாகி, நடைச் சிறப்பையும் நல்கி உள்ளன என்பது தெளிவு.

## திருக்குறளில் வரும் தலையாகு எதுகை எண்ணிக்கை அடைவு

| தலையாகு எதுகை வகை | ஒத்த சொல் | | முதல் எழுத்துத் தவிர ஏனைய ஒத்தல் | | ஒற்றுவகை வேறுபாடு | | | மூவசைகளில் ஈரசை ஒத்தவை | மொத்தம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | ஈரசை | மூவசை | ஈரசை | மூவசை | ஒற்று நீக்கம் | ஒற்றுக் கூடல் | ஒற்று மாற்றப் | | |
| அடி | 8 | 3 | 85 | 78 | 3 | 5 | 1 | 71 | 255 |
| இணை | 5 | 2 | — | — | — | — | — | 8 | 15 |
| பொழிப்பு | — | — | — | 1 | — | — | — | 1 | 2 |
| ஒரூஉ | 2 | 2 | 29 | 94 | 7 | 9 | 3 | 13 | 189 |
| மேற்கதுவாய் | 1 | — | — | — | — | — | — | — | 1 |
| மொத்தம் | 16 | 7 | 114 | 172 | 10 | 14 | 4 | 93 | 462 |

# திருக்குறளில் தலையாகு எதுகைகளும் அவை இடம்பெறும் குறள்களும்

## 1. சீர் முழுதும் ஒத்தல் (13)

**1.1** அடி எதுகை : 26, 347, 350, 411, 540, 553, 577, 591, 1158, 1994, 1314

**1.2** இணை எதுகை: (7)
297(2), 310(2), 341, 625, 1314

**1.3** மேற்கதுவாய் எதுகை : (1)
105

**1.4** ஒரூஉ எதுகை: (4)
131, 434, 466, 849

## 2. முதல் எழுத்துத் தவிர்த்து ஏனைய ஒத்தல்

2.1 அடி எதுகை: (163)

5, 8, 13, 15, 19, 23, 24, 28, 35, 38, 40, 57, 73, 77, 94, 99, 113, 157, 158, 173, 175, 181, 195, 197, 198, 225, 244, 249, 254, 258, 266, 268, 270, 281, 282, 288, 297, 303, 304, 310, 318, 321, 327, 328, 348, 354, 360, 370, 371, 376, 382, 392, 393, 403, 407, 408, 426, 436, 437, 441, 450, 455, 458, 459, 470, 477, 478, 480, 485, 489, 517, 524, 542, 547, 548, 552, 557, 579, 594, 595, 608, 609, 611, 613, 614, 615, 628, 637, 665, 669, 673, 688, 690, 706, 733, 741, 756, 770, 773, 774, 779, 786, 800, 806, 807, 808, 833, 846, 854, 872, 882, 886, 897, 898, 900, 916, 925, 932, 934, 940, 945, 947, 948, 949, 958, 959, 963, 964, 975, 978, 984, 989, 998, 1002, 1014, 1026, 1033, 1034, 1038, 1046, 1052, 1078, 1149, 1152, 1166, 1195, 1198, 1201, 1205, 1225,

1227, 1228, 1263, 1272, 1273, 1274, 1284, 1287, 1300, 1306, 1327, 1329

2.2 பொழிப்பு எதுகை: *(1)*

614

2.3 ஒரூஉ எதுகை: (123)

42, 46, 81, 84, 92, 96, 106, 117, 133, 136, 137, 142, 150, 154, 163, 164, 176, 178, 180, 185, 192, 199, 207, 239, 240, 241, 243, 247, 248, 252, 286, 287, 289, 296, 301, 306, 312, 329, 330, 343, 352, 353, 355, 358, 367, 379, 384, 387, 413, 416, 419, 423, 439, 453, 457, 481, 484, 497, 498, 514, 529, 531, 536, 551, 559, 573, 576, 593, 601, 604, 606, 626, 636, 670, 683, 685, 689, 708, 714, 719, 737, 749, 757, 760, 769, 813, 827, 829, 844, 857, 860, 865, 877, 884, 885, 893, 901, 909, 933, 960, 971, 995, 1019, 1056, 1069, 1070, 1091, 1131, 1185, 1192, 1213, 1214, 1217, 1219, 1229, 1230, 1248, 1267, 1268, 1270, 1279, 1282, 1305

## *3.* ஒற்றுவகை வேறுபாடு

### *3.1* ஒற்று நீக்கம்

3.1.1 அடி எதுகை: (3)

544, 912, 956

3.1.2 ஒரூஉ எதுகை: (7)

187, 246, 522, 750, 799, 852, 1276

### *3.2* ஒற்று மிகல்

3.2.1 அடி எதுகை: (5)

52, 155, 182, 927, 1302

3.2.2 ஒரூஉ எதுகை (9)

189, 194, 234, 285, 325, 523, 568, 1172

*3.3 ஒற்று மாற்றம்*

3.3.1 அடி எதுகை: (1)

56

3.3.2 ஒரூஉ எதுகை: (3)

132, 1223, 1234

*4. ஒருசீர் குறைவன*

4.1 அடி எதுகை: (19)

153, 162, 177, 201, 267, 313, 326, 383, 454, 709, 907, 1024, 1059, 1090, 1178, 1196, 1226, 1255, 1283

4.2 இணை எதுகை: (5)

470, 520, 670, 881, 973

4.3 பொழிப்பு எதுகை: (1)

832

4.4 ஒரூஉ எதுகை: (5)

123, 417, 687, 938, 1066

*5. ஒரு சீர் குறைவன*

5.1 அடி எதுகை: (22)

33, 75, 86, 102, 233, 245, 293, 324, 405, 622, 635, 671, 751, 875, 1012, 1040, 1042, 1061, 1063, 1110, 1237, 1269

5.2 இணை எதுகை: (1)

608

5.3 ஒரூஉ எதுகை; (10)

93, 104, 156, 316, 374, 456, 607, 728, 762, 974

## 6. இறுதிச் சீர் மாற்றம் பெற்றவை

### 6.1 குறில் மாற்றம்

**6.1.1** அடி எதுகை: (4)

569, 712, 721, 902

**6.1.2** ஒரூஉ எதுகை: (1)

888

### 6.2 குறில் ஒற்று மாற்றம்

**6.2.1** அடி எதுகை: (5)

183, 649, 767, 969, 1112

**6.2.2** ஒரூஉ எதுகை: (9)

91, 143, 144, 263, 438, 495, 663, 720, 1150

### 6.3 நெடில் மாற்றம்

**6.3.1** அடி எதுகை: (2)

1059, 1221

### 6.4 நெடில் ஒற்று மாற்றம்

**6.4.1** அடி எதுகை: (1)

402

**6.4.2** ஒரூஉ எதுகை: (5)

147, 242, 433, 892, 1220

### 6.5 குறில்→குறில்+ஒற்று

**6.5.1** அடி எதுகை: (3)

563, 1027, 1074

6.5.2 ஒரூஉ எதுகை: (3)
238, 851, 1241

## 6.6 குறில்→நெடில்+ஒற்று

6.6.1 அடி எதுகை: (1)
910

6.6.2 ஒரூஉ எதுகை: (1)
492

## 6.7 குறில்+ஒற்று→குறில்

6.7.1 அடி எதுகை: (1)
1094

## 6.8 குறில்+ஒற்று→நெடில்

6.8.1 அடி எதுகை: (3)
128, 1041, 1212

6.8.2 ஒரூஉ எதுகை: (1)
695

## 6.9 குறில் + ஒற்று → நெடில் + ஒற்று

6.9.1 அடி எதுகை: (3)
250, 511, 1022

6.9.2 இணை எதுகை: (1)
834

6.9.3 ஒரூஉ எதுகை: (3)
159, 529, 1246

## 6.10 நெடில் → குறில்

6.10.1 அடி எதுகை: (1)
1222

## *6.11* நெடில் → குறில் + ஒற்று

**6.11.1** அடி எதுகை: (3)
76, 752, 1111

**6.11.2** ஒரூஉ எதுகை: (1)
496

## *6.12* நெடில் → நெடில் + ஒற்று

**6.12.1** அடி எதுகை: (1)
701

## *6.13* நெடில் + ஒற்று → குறில்

**6.13.1** அடி எதுகை: (1)
528

**6.13.2** ஒரூஉ எதுகை: (1)
1028

## *6.14* நெடில் + ஒற்று → குறில் + ஒற்று

**6.14.1** அடி எதுகை: (2)
294, 859

**6.14.2** ஒரூஉ எதுகை: (3)
103, 826, 1182

# 5. குறள் வடிவமும் வள்ளுவர் நோக்கமும்

## 5.1 வடிவ மாற்றம்

### 5.1.1 திருப்பு மையம்

5.1.1.1 நான்குவகைப் பாக்களுள் ஆசிரியப்பாவும் வெண்பாவுமே 'முதற்பாக்கள்' என்னும் சிறப்பிற்குரியன. ஆசிரியப்பாவின் நடையை அடிப்படையாகக் கொண்டு தோன்றியது வஞ்சிப்பா; வெண்பாவின் நடையை அடிப் படையாகக் கொண்டு தோன்றியது கலிப்பா என்பர்.[1] கலிப்பாவும் வெண்பா யாப்பினால் அமையும் பரிபாட்டும்[2] அகத்திணைப் பாடல்கள் பாடுவதற்கு உரிமையுடையன வாகக் கருதப்பட்டன.[3] பிற பாக்கள் அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாய் அமைவனவாக உரையாசிரியர் களால் கருதப்பட்டன.[4] ஆனால் கலிப்பாவும், அகத்திற்கும் புறத்திற்கும் பொதுவாக அமையும் என்பதைத் தொல்காப்பியரே சுட்டுகின்றார்.[5] பெரும் பான்மை நோக்கி அகத்திற்கு உரிமையுடையதாகக் கருதினார் போலும்! அவர், பரிபாட்டு புறத்திற்கும் வருமென்று சுட்டவில்லை; அகத்திற்கே உரிமையுடைய பாடலாகக் கருதுகின்றார் என்றாலும், பரிபாடலில்அகமும் புறமும் கலந்து வந்துள்ளமையைக் காணுகின்றோம். இஃது இலக்கிய வளர்ச்சிநிலை எனக் கருதலாம்.

5.1 1.2 சங்கத் தொகைப் பாடல்கள் நோக்கின், தொல்காப்பியர் காலத்திற்குப் பின், அகத்திணைப்

பாடல்கள் பாடும் மரபில் வடிவத்தைப் பொருத்தவரை ஒரு சிறு நெகிழ்ச்சி நிலைமை உருவாகியிருப்பதை உணர முடிகின்றது. (நெகிழ்ச்சி சிறியதாயினும் இலக்கிய வரலாற்றில் பெரிதும் கருதத்தக்க ஒன்றே). புலனெறி வழக்கிற்கு உரிமை வகையான் அமைந்த பாடல்களால் அகத்திணைப் பாடல்களைப் பாடாமல், பெரிதும் பொது வகையான் அமைந்த பாக்களுள் ஒன்றாகிய ஆசிரியப் பாவையே பெரிதும் பின்பற்றியுள்ளனர். அதாவது, சிறப்பு நிலையிலிருந்து பொது நிலைக்கு நகர்ந்துள்ளனர் எனலாம். இத்தகு நெகிழ்ச்சி நிலைமைக்குச் சில காரணங்கள் கூறலாம்.

அ. பிற பாக்களைப் பாடுவதினும் ஆசிரியப்பாவைப் பாடுவதில் உள்ள எளிமை.

ஆ. கலியும் பரிபாட்டும் அடியின் எண்ணிக்கை வரையறையில் நீண்டுள்ள தன்மை.

இ. கலி, பரிபாட்டு ஆகியவற்றின் அமைப்பு நிலையில் உள்ள சிக்கல்கள் (அதாவது அமைப்பில் எளிமை இன்மை).

ஈ. சங்கப் புலவர்கள் விரும்பிய வடிவ மாற்றம்.

உ. சங்கப் புலவர்களில் பெரும்பாலான புலவர்கள் அகமும் புறமும் ஒருசேரப் பாடியவர்கள்; அவர்களில் சிலர் ஒரு குறிப்பிட்ட பாவகை யிலேயே தம் புலமையைக் காட்ட முனைந் திருப்பர்; அம்முனைப்பையே பின்னால் வந்த புலவர்கள் ஒரு மரபாகப் பின்பற்றியிருப்பர்.

5.1.1.3 கடைச் சங்க காலத்தின் இறுதியில் மீண்டும் கலிப்பாவும் பரிபாட்டும் பயன்படுத்தப்பட்டுள்ளன. (அகத்திற்கும் புறத்திற்கும் உரியதாக விளங்கிய கலிப்பா, அகப்பாடல்கள் பாட மட்டுமே பயன்படுத்தப் பட்டுள்ளது). ஒரு சில வெண்பாக்களும் காணப்

படுகின்றன. ஆனால், வெண்பாவால் — குறிப்பாகக் குறள் வெண்பாவால் ஆகிய ஒரு நூல் இருந்ததாகத் தெரியவில்லை.[6] கிடைத்துள்ள நூல்கள் வரை நோக்கின், முதன்முதல் வள்ளுவர்தாம் வடிவ அமைப்பிலும் கரு அமைப்பிலும் ஒரு திருப்பு மையத்தை உருவாக்கி யிருக்கின்றார்.

## *5.1.2 மரபையொட்டிய புரட்சி*

**5.1.2.1** நான்கு வகைப் பாக்களுள் ஒன்றாகிய வெண்பா, அகமும் புறமும் பாடுதற்கமைந்த பொது வகையான பாவாகத் தொல்காப்பியர் சுட்டுகின்றார்; தொல்காப்பிய உரையாசிரியர்களும் இக் கருத்தினரே.

**5.1.2.2** ஆசிரியப்பாவையே பெரிதும் அகம் பாடுதற் குரிய பாவாகச் சங்கப் புலவர்கள் கைக்கொண்டிருப் பினும், வெண்பாவால் இயன்ற ஒருசில அகப்பாடல் களும் காணப்படுகின்றன.

**5.1.2.3** வெண்பா நடையையுடைய கலிப்பாவும், வெண்பா யாப்பையுடைய பரிபாட்டும் வெண்பாவிற்குப் பின்னர்த் தோன்றியவை; அகம்பாடும் சிறப்பிற்குரியவை. அவ்வாறாயின், இவ்விரண்டும் தோன்றா முன்னர், வெண்பாவே அகம்பாடுதற்குரிய சிறப்புப் பாவாகப் பயன்படுத்தப் பட்டிருக்கலாமோ என்ற ஐயம் எழுகின்றது. பாடுதற்கரிய, கட்டுப்பாடுகள் செறிந்த அகப்பொருளை (இதனால்தான் தொல்காப்பியர் பெரும் பாலான இயல்களை அகப்பொருளுக்குரியதாகவே அமைத்தார் போலும்!) பாடுதற்கரிய, கட்டுப்பாடுகள் செறிந்த ஒரு பாவால் (வெண்பாவால்) பாட முனைந் திருக்கலாம் எனக் கருதவும் இடமுளது.

**5.1.2.4** பொதுவாக, வெண்பாவால் அகப்பொருள் பாடும் மரபு இருந்திருக்கிறது என்பது தெளிவு; அந்த மரபையொட்டியே வள்ளுவரும் காமத்துப்பாலை

வெண்பா யாப்பினால் பாடியுள்ளார்; ஆனால், இது காறும் அறிந்தவரை, அவர் காலம் வரை, யாரும் (தனித்துப்) பாடாத குறள் வெண்பாவினால் பாடியது அவர் செய்த மரபையொட்டிய புரட்சியே; அறமும் பொருளுங்கூட அவ்வாறே.

## *5.2* வெண்பா வடிவம்

### *5.2.1* வடிவமும் நோக்கமும்

**5.2.1.1** வள்ளுவர் அமைப்பு முறைகளையெல்லாம் வரையறுத்துக்கொண்டு தம் நூலை இயற்றியும் இருக்கலாம்; அல்லது, அவ்வப்போது தோன்றிய கருத்துகளை எழுதி வைத்துப் பின்னர் தொகைவகை செய்து ஓர் அமைப்பு முறையை அமைத்தும் இருக்கலாம். எந்த முறையை அவர் பின்பற்றியிருப்பினும், ஒரு குறிப்பிட்ட பாவால் தம் நூல் முழுவதும் அமைய வேண்டும் எனக் கருதியே எழுதத்தொடங்கி இருப்பார் என்பது உண்மை. அந்தக் குறிப்பிட்ட பாவாக வெண்பாவை ஏன் அவர் கருதினார் என்பது ஆராயத் தக்கதே.

### *5.2.2* வடிவ மாற்றம்

**5.2.2.1** மும்முதற் பொருள்களாகிய அறம், பொருள், இன்பங்களைப் பொதிய வைத்து அரிய கருத்துகளைப் பெரும்பான்மையும் ஆசிரியப்பாவால் தந்தனர் சங்க நூலார்; எத்துணைதான் இலக்கிய ஈடுபாடு உடையவரே யாயினும் ஒரே வடிவ அமைப்பினால் இயன்ற இலக்கியங்களைப் படிப்பதால் சோர்வடைவதும், அல்லது கேட்பதால் சோர்வடைவதும் இயல்பான மனநிலைகள்; படைப்பவனும் ஒரே வடிவத்தைப் பின்பற்ற நினைப்பது ஒரு குறிப்பிட்ட நிலையில் அவனுக்கே மனச்சோர்வை உண்டாக்கும். (இம் மன நிலைகளையும் அடிப்படையாகக் கொண்டுதான் இலக்கிய வரலாற்றில் பல்வேறு வடிவ மாற்றங்கள்

ஏற்பட்டுள்ளன; ஏற்பட்டும் வருகின்றன.) ஆகவே, இலக்கிய வரலாற்றில் வடிவ மாற்றத்திற்கு வழிவகுப்பது படைப்பாளனால் வரவேற்கத் தக்கதாகின்றது. அதிலும், அறக் கருத்துகளைச் சமுதாயத்திற்கு எடுத்துக்கூறிச் சமுதாயத்தை நல்வழி நடாத்த நினைத்து அதற்காக நூலெழுத முனைபவர்கள், இதைப் பெரிதும் கருத்தில் கொள்ள வேண்டியதாகின்றது. இல்லையென்றால், எத்துணைதான் உயர்ந்த கருத்துகளைப் பெற்றிருப்பினும் ஒரு நூல் கற்றவரிடையேயும், அவர்பால் எழும் மனச் சோர்வினால், அதற்குரிய மதிப்பைப் பெற முடியாத நிலை ஏற்பட்டும் விடலாம்.

**5.2.2.2** மேற்சுட்டிய உண்மையை உணர்ந்து, வள்ளுவர் ஆசிரியப்பாவின்றும் வேறுபட்ட ஒரு வடிவ அமைப்பை நாடியும் இருக்கலாம். ஆசிரியப்பாவி னின்றும் வேறுபட்ட அமைப்பென்றால், கலிப்பா, வஞ்சிப்பா போன்றவற்றையும் கருதியிருக்கலாமே; இப்பாக்களாலும் அறக்கருத்துகளை எடுத்துரைக்க முடியும் என்பதற்குச் சங்கப் பாக்களே சான்றுகளாக இருக்கின்றனவே! அப்படியானால், வெண்பாவை மட்டுமே அவர் பயன்படுத்த முனைந்தது ஏன் ? என்ற வினா எழுகின்றது.

## *5.2.3 இயல்பான ஓசை*

**5.2.3.1** செய்யுளின் ஓசையைப் பிரிக்கின்றபொழுது வழக்கில் உள்ளன என்றும் இல்லன என்றும் இரண்டாகப் பிரிப்பர். வழக்கில் உள்ளனவாகக் கருதப்படும் ஓசைகள் அகவலோசையும் அகவும் இயல்பற்ற ஓசையுமாம்; அகவும் இயல்பற்ற ஓசையை வெண்பா யாப்பிற்குரிய செப்பலோசை என்பர்.[1]

**5.2.3.1.1** அகவலோசை என்பது அழைத்தல் தன்மையான் தொடர்ந்து நிற்பதோர் ஓசை.

'அவை தச்சுவினைமாக்கள் கண்ணும், களம் பாடும் வினைஞர் கண்ணும், கட்டுங் கழங்கு மிட்டு உரைப்பார் கண்ணும், தம்மில் உறழ்ந்துரைப்பார் கண்ணும், பூசலிசைப்பார் கண்ணும் கேட்கப்படும்'[8]

என்று இவ்வோசை எழும் நிலைகளை உரைப்பார் பேராசிரியர். நச்சினார்க்கினியரும் இக்கருத்தோடு ஒத்து நிற்பார்.[9]

**5.2.3.1.2** செப்பலோசை என்பது ஒருவருக்கொருவர் பேசுங்கால் இயல்பாக எழுகின்ற ஓசை.[10]

**5.2.3.2** சமுதாயத்தில் அறநெறியைப் பரப்ப வேண்டும்; அந்நெறி, கற்றறிந்த நல்லோரிடம் மட்டுமல்லாமல் ஓரளவே கற்ற மக்களிடமும் எளிதில் பரவ வேண்டும் என்ற நோக்குடையவர் வள்ளுவர்.[11] இயல்பாகவே ஒருவரொடு ஒருவர் பேசிக் கொள்கின்ற நடையில் அறக்கருத்துகள் அமைந்திருக்குமாயின், ஓரளவே கற்றவர் மனத்திலும் எளிதில் பதியும்; விரைவில் பரவும். ஆகவே, வள்ளுவரும் இயல்பான பேச்சு நடையையுடைய வெண்பாவைத் தம் கருத்துகளை வெளியிடுவதற்குரிய கருவியாகப் பயன்படுத்தி யிருக்கலாம்.

## *5.2.4 வெண்பாவின் தூய்மை*

**5.2.4.1** ஒரு கருத்து, சமுதாயத்தில் எளிதில் பரவ வேண்டுமானால் கீழ்வருவனவற்றையும் நாம் மனத்தில் கொள்ள வேண்டும்.

அ) ஒரு கருத்தை வெளிப்படுத்துபவனிடம் உள்ள தூய்மை.

ஆ) வெளிப்படுத்தப்படும் கருத்திலுள்ள தூய்மை.

இ) கருத்தை வெளிப்படுத்தும் விதத்திலுள்ள தூய்மை.

இவை மூன்றும் இன்றியமையாது வேண்டப்படுவன.

5.2.4.2 அறநெறியாளர்கள் கட்டுப்பாடும், தூய்மையும் அவற்றால் உயர்வும் பெற்று விளங்குபவர்கள். அவர்கள் கூறும் அறக்கருத்துகள், தனிமனிதக் கட்டுப்பாட்டை - சமுதாயக் கட்டுப்பாட்டை வலியுறுத்துவன; எண்ணம் சொல் செயல் என்னும் மூன்று நிலைகளிலும் தனிமனிதத் தூய்மையை - அதன் வழியே சமுதாயத் தூய்மையை நாடுவன; உயர்வுக்கு வழி வகுப்பன.

5.2.4.3 வெண்பாவோ நான்கு வகைப் பாக்களுள்ளும் தளைவகைக் கட்டுப்பாடுகள் நிறைந்தது; தளைகளோடு பிற அடிகளும் மயங்குதல் அற்றநல் தூய்மைஉடையது; தன் தூய்மையால் பாவகைகளிலேயே உயர்ந்து விளங்குவது.

5.2.4.4 ஆகவே, தூய்மை மனத்தினரான வள்ளுவர் சமுதாயத் தூய்மை கருதி, தாம் வெளிப்படுத்தும் தூய்மையான கருத்துகளுக்குத் தூய்மையான ஒரு வடிவத்தை - வெண்பாவை நாடியுமிருக்கலாம். தூய்மையான கருத்துகளைத் தூய்மையான ஒரு வடிவத்தில் தரும்போது கற்றவர்களிடை இயல்பாகவே ஒருவகை ஈர்ப்பிற்கு வழியேற்படும் என்பதை வள்ளுவர் உணர்ந்துமிருக்கலாம்.

## 5.2.5 படைப்பதில் உள்ள அருமை

5.2.5.1 வெண்பாவிலுள்ள இயல்பான நடை படிப்பதற்கு எளிமையானது; ஆனால், அதிலுள்ள கட்டுப்பாடுகள் படைப்பு நிலையில் எளிமைக்குப் பெருந்தளையாக அமைந்து விடுகின்றன. ஒரு நூல் முழுவதையும் வெண்பா யாப்பினால் யாப்பது என்பது ஓர் அரிய செயல்; அதிலும், அறக்கருத்துகளை வெண்பா

யாப்பினால் தெளிவாக எளிமையாக வெளிப்படுத்துவது என்பது அரிதினும் அரிய செயல்.

5.2.5.2 வள்ளுவர், 'செயற்கரிய செய்வார் பெரியர்' என்ற உணர்வுடைய அறவாணர்; ஆகவே, சமுதாய நல்வாழ்விற்கு வேண்டிய அறக்கருத்துகளை வெளிப்படுத்தும் அரிய பணியை மேற்கொண்ட அவர், அதனைப் படைப்பதற்கரிய ஒரு வடிவத்தில் வெளியிடுவதன்வழி இலக்கிய வடிவ வரலாற்றிலும் செயற்கரியதொரு செயலைச் (ஒரே கல்லில் இரு கனிகளை வீழ்த்தும் செயலைச்) செய்ய வேண்டும் எனக் கருதியிருக்கலாம். அந்த உள்ளுணர்வோடே வெண்பாவை அவர் பயன்படுத்தியுமிருக்கலாம்.

## 3. குறள் வெண்பா வடிவம்

### 5.3.1 வடிவமும் மதிப்பும்

**5.3.1.1** ஈரடி முதல் பன்னீரடி முடிய பதினொரு வகையான எல்லை வரையறைகளைக் கொண்டது வெண்பா என்பது தொல்காப்பியம்.[18] இப்பதினொரு வகையுள்ளும் மிகமிகச் சுருங்கிய வடிவான / அடிவரையறை கொண்ட குறள் வெண்பாவை மட்டுமே தம் கருத்துகளை வெளிப்படுத்துதற்குரிய 'ஒரு பெரும் கருவி'யாக வள்ளுவர் கருதியிருக்கிறார்; கருதிய வழியே செயற்பட்டும் இருக்கிறார்; செயற்பட்டுப் பெருவெற்றியும் பெற்றிருக்கிறார்.

**5.3.1.2** கருத்துகள்தாம் இன்றியமையாதவை, வடிவம் அன்று என்று அவர் கருதி இருந்தால், முன்னோர் பயன்படுத்திய ஆசிரியப்பாவையே பயன்படுத்தியிருக்கலாம்; அல்லது, வெவ்வேறு வடிவங்களைப் பயன்படுத்தியும் தம் கருத்துகளைத் தொகுத்திருக்கலாம். ஆனால் அவ்வாறு கருதாமல், சில அடிப்படை நோக்கங்களை / சூழல்களை மனத்துட்கொண்டு தம்

அறக்கருத்துகளை வெளியிடுவதற்குரிய ஒரு குறிப்பிட்ட, சுருங்கிய வடிவை நாடியிருக்கின்றார் என்பது தெளிவு.

5.3.1.3 பகுப்பு வகையான் திருக்குறளுக்கு அமைந்த 'முப்பால்' என்னும் பெயர், வழக்கில் அருகி வடிவ வகையான் இதற்கு அமைந்த 'குறள்' என்னும் பெயரே வழக்கில் பெருகி, அதுவே பின்னர் நிலைத்துவிட்ட தென்றால், வடிவ அமைப்பில் இந் நூலுக்கிருந்த 'தனி மதிப்பு' வெளிப்படையாகின்றதன்றோ? வள்ளுவருக்கு மட்டுமல்ல அவருக்குப் பின் வந்தவர்களுக்கும் குறள் வடிவம் ஒருபெரும் ஈர்ப்பினுக்கு இடமளித்திருக்கின்றது என்பது தெளிவாகின்றது.[13] ஆகவேதான், வள்ளுவர் ஏன் குறள் வெண்பாவையே தம் கருத்துக்களை வெளிப் படுத்தும் கருவியாகக் கொண்டார் என்பதை ஆராய வேண்டியதோர் இன்றியமையாமை எழுகின்றது.

## 5.3.2 வள்ளுவருக்கு முன்

5.3.2.1 வள்ளுவருக்கு முன் வாழ்ந்த தமிழ்ச் சான்றோர்கள் தாம் வாழ்வில் கண்டறிந்த அனுபவங் களையெல்லாம் (பிறருக்கும் அவை பயன்பட வேண்டும் என்னும் நோக்கத்தான்) பழமொழிகளாக, முதுமொழி களாக[14] வெளிப்படுத்தியுள்ளனர். இவ்விரண்டுமே மிகச் சுருங்கிய வடிவங்கள் கொண்டவை.

5.3.2.2 வாய்மொழி (மந்திரம்),[15] வழக்கியலாணை[16] போன்றன இலக்கிய வடிவங்கள்; இவை மிகச் சுருங்கிய வடிவினவாக இருந்திருக்கலாம்.

5.3.2.3 வள்ளுவருக்கு முன் அறநூல்கள் இருந்திருக் கின்றன.[17] ஆனால் அவற்றின் வடிவம் பற்றி ஒன்றும் அறிய முடியவில்லை.

5.3.2.4 தொல்காப்பியர் சுட்டும் குறுவெண்பாட்டு இரண்டு அல்லது மூன்று அடிகள் கொண்டது; இரண்டு

அடிகள் வரையறை கொண்ட இலக்கிய வடிவ அமைப்பை அவர் சுட்டுகின்றார் என்றால், அவருக்கு முன்னரே ஈரடி வெண்பா சிலராலேனும் பயன்படுத்தப் பட்டிருக்க வேண்டும்.

5.3.2.5 வள்ளுவருக்கு முன்னரே வழக்கில் இருந்த இந்த வடிவங்கள், அவர் சுருங்கிய வடிவில் கருத்து களை வெளியிட முன்மாதிரிகளாக இருந்திருக்கலாம்.

### *5.3.3* கல்விமுறையும் சுருக்கமும்

5.3.3.1 பண்டைய கல்வி முறை, கண்வழிக் காண் பதினும், செவிவழிக்கேட்பதையும் கேட்டதை அப்படியே மனத்தில் பதிய வைத்துக் கொள்வதையும் அப்படை யாகக் கொண்டதாகும். அந்நிலையில், சுவைத்து இன் புறத்தக்க, காதல் போர் பற்றிய, பாடல்களாக இருப்பின் உள்ளத்தில் சென்று பதிவதற்கு அதிக வாய்ப்புண்டு. அறக்கருத்துகள் என்றால் ஒருமுறை கேட்டதும் ஓரளவே மனத்தில் பதியவைத்துக் கொள்ள முடியும்; அளவிற்கும் அதிகமாக ஆகுமானால் கற்பதிலும் கேட் பதிலும் சோர்வு தோன்றும்; அதிலும், சமுதாய வாழ் வியல் அறங்கள் முழுவதையும் நீண்ட பாடல்கள்வழி கற்றோ கேட்டோ மனத்தில் இருத்திக் கொள்ளுதல் அரிது; ஆண்டும் பலவாகும். ஆகவே, அறக்கருத்து களுக்குச் சுருங்கிய வடிவம் பெரிதும் இன்றியமையாத தாகின்றது.

5.3.3.2 பண்டைய காலம், இன்று உள்ளதுபோல் கல்வித்துறையின் பெரும்பாலான போக்குகளில் பெரும் வளர்ச்சிப் பெற்றிருந்த காலம் அன்று; கற்றவை கேட் டவை எல்லாவற்றையும் மனத்திலிருத்தி அவற்றை அடுத்தத் தலைமுறையினருக்காக எழுதிப் பாதுகாத்து வைப்பதென்பது அன்று அவ்வளவு எளிதன்று. எல்லா வற்றையும் மனத்திலிருத்திக் கொள்வது அரிதென்றால் மனத்திலிருத்தியவற்றையேனும் எழுத்தாணி கொண்டு,

பனை ஓலையில் கை வலிக்க எழுதி வைப்பது என்பது அதனினும் அரிது; பொறுமை மிக வேண்டும்.[18] (இத்தகு அருமைப்பாட்டினாலும் பல்லாயிரக்கணக்கான சங்கப் பாடல்கள் அழிந்திருக்கக்கூடும்!) எழுதி வைப்பது, அளவால் மிக்க அளவில் அவற்றைப் பாதுகாப்பது அரிதினும் அரிதாகின்றது. ஆகவே, எழுதி வைக்கும் (அல்லது படியெடுக்கும்) அருமை கருதியும், பாதுகாத்தலில் உள்ள அருமை கருதியும், கருத்துகளை - குறிப்பாக அறநூற் கருத்துகளைச் சுருக்கமாக உரைக்க வேண்டிய தேவை ஏற்படுகின்றது. வாழ்வியல் அறங்களையெல்லாம் ஒருசேர - அறம் பொருள் இன்பம் என்னும் மூன்று நிலையிலும் தேவையான கருத்துகளையெல்லாம் - நிரல்பட உரைக்க வேண்டும் என்று கருதும் வள்ளுவர் போன்றோர் எவ்வளவு சுருக்கமாகக் கருத்துகளை உரைக்க வேண்டும் என்பது சொல்லாமலே விளங்கும்.

5.3.3.3 கல்வியின் பல்வேறு நிலைகளில் ஒன்று மாணவர்கள் தாம் கற்றதை/கேட்டதை ஒருவரோடொருவர் கலந்து அளவளாவி, ஐயங்களை அறிவதும், புது விளக்கம் பெறுவதும் ஆகும்.[19] அவ்வாறு அவர்கள் தம் மனத்திலிருத்திய கருத்துகளை ஒருவரோடொருவர் கலந்து அளவளாவ வேண்டுமாயின் கற்ற/கேட்ட கருத்துகள் எளிமையாக, தெளிவாக, சுருக்கமாக இருக்க வேண்டியதும் அவசியமாகின்றது, விரிந்து பரந்த கருத்துகள், ஒருவரோடொருவர் அளவளாவுங் காலத்து மனச்சோர்வை விளைவிக்கவும் கூடும்.

சுருக்கத்தின் இன்றியமையாமைக்குரிய மேற்சுட்டிய கருத்துகளையும் வள்ளுவர் கருதியிருக்கலாம்.

### 5.3.4 *சமுதாயச் சூழலும் சுருக்கமும்*

**5.3.4.1** வள்ளுவர் மிகமிகச் சுருங்கிய வடிவில் அறக் கருத்துகளைக் கூற முனைந்ததற்கு அப்போதைய

சமுதாயச் சூழல்களும் அடிப்படைக் காரணங்களுள் ஒன்று எனலாம். வள்ளுவர் வாழ்ந்த காலம் சமுதாய, சமய, பொருளாதாரப் போராட்டங்கள் நிறைந்த காலம். போராட்டங்கள் நிறைந்த சிக்கலான ஒரு சமுதாயம் பிறர் சொல்வதை (தனக்கே பயனுடையதாயினும்) அமைதியாகக் கேட்கின்ற அளவிற்குப் பொறுமை பெற்று விளங்காது; விளங்கவும் முடியாது. ஆகவே, அத்தகு சமுதாயத்தில் மக்களை நல்லாற்றுப் படுத்த நீண்ட சொற்பொழிவாற்றும் சொற்பொழிவாளர்கள் தேவையில்லை; அவர்கள் கூறுவதை மக்கள் பொருட் படுத்தவும் மாட்டார்கள்; உயர்ந்த கருத்துகளை மிகச் சுருக்கமாக எளிமையாக அழகுற எடுத்துரைக்கும் (அற) நெறியாளர்களே தேவை.

5.3.4.2 கருத்துகள் பெறும் வெற்றி என்பது சொல் வானை மட்டுமன்று, அக்கருத்துகளைக் கொள்வானை யும் பொருத்தே அமைகிறது. சொல்பவன், தான் சொல்ல விழையும் கருத்தின் திறத்தையும், யாருக்குச் சொல்ல விழைகின்றானோ அவர்தம் கொள்ளுந்திறத்தையும் மிகத் தெளிவாக உணர்ந்து எக்கருத்தையும் சொல்லுதல் வேண்டும் என்பது வள்ளுவர் வாய்மொழி.[20] இன்புறு தலை நோக்காகக் கொண்ட கருத்துகளைச் சற்றே விரித்துரைப்பினும் கேட்பவன் உடனே மனச்சோர்வு அடைவதில்லை; ஆனால் அறிவுறுத்தலை நோக்காகக் கொண்ட கருத்துகளைச் சற்றேனும் விரித்துச் சொல்ல நேரிடின், கேட்பவர் விரைவில் மனச்சோர்வு அடைவர்; சொல்லும் கருத்தால் விளையத்தக்க பயன் விளையாது; சிறிய அளவினதான கருத்துகளே கேட்போர் மனத்தில் பசுமரத்தாணி போல் பதிய முடியும்; பயனையும் கொடுக்கும். (நீட்டி வைக்கப்பட்டிருக்கும் கம்பிக்கு இருக்கும் ஆற்றலை விடச், சுருள்சுருளாகச் சுருட்டி வைக்கப் பட்டிருக்கும் கம்பிச்சுருளுக்கு இருக்கும் ஆற்றல் பன்மடங்கு பெரிது என்பதை இங்கு நினைவுகூர்தல் வேண்டும்). ஆகவே, சொல்ல வேண்டிய நல்ல கருத்து

களையெல்லாம் செறிவாக்கி, அதே நேரத்தில் எளிமை யாக்கிக் கேட்போர் உளங்கொள உரைக்க வேண்டியது, மக்களை நல்லாற்றுப்படுத்த விழையும் அறநெறியாளர் களுக்குரிய கடமையாகின்றது.

5.3.4.3 அறநெறிகள், ஒரு சமுதாயத்தின் நடை முறைகளை நன்கு ஆராய்ந்து, ஆன்றவிந்த ஆன்றோர் களால், வெளிப்படுத்தப்படுபவை; அவற்றுள் சில வேனும் நாட்டின் சட்டங்களாகும் தகுதி படைத்தவை; ஆணைகளாக அமைபவை; அதனால்தான் தொல் காப்பியர் அறக்கருத்துகளை 'வழக்கியலாணை' என்றார் போலும்! பொதுவாக, ஆணைகள் சுருங்கிய வடிவில் அமைவனவே.

சுருக்கத்தின் இன்றியமையாமைக்குரிய மேற்சுட்டிய கருத்துகளையும் வள்ளுவர் கருதியிருக்கலாம்.

## 5.3.5 இலக்கியச் சூழலும் சுருக்கமும்

5.3.5.1 தம் கருத்துகளை வெளியிடுதற்குரிய கருவி யாக வெண்பாவைத் தேர்ந்த வள்ளுவர், அதில் தெளிவு எளிமை இவற்றோடு செறிவு சுருக்கம் ஆகியவையும் ஒருங்கிணைந்து விளங்க வேண்டும் என்ற உள்ளுணர்வு உடையராகி, அதற்குரிய வடிவமாகக் குறள் வெண் பாவை அவர் தேர்ந்திருக்கலாம்.

5.3.5.2 குறள் வெண்பா அவர் காலத்தில் ஓர் அருகிய வழக்காக இருந்திருக்கலாம்; அதன் சுருங்கிய வடிவச் சிறப்பினை நினைந்து, அருகிய வழக்கான அவ் வடிவை ஒரு நூல் முழுமைக்கும் பயன்படுத்தவும் நினைத்திருக்கலாம்.

5.3.5.3 குறள் வெண்பா போலும் சுருங்கிய செய்யுள் வடிவத்தில் அறம் பொருள் இன்பங்களைச் செறிவாக, எளிய முறையில், எல்லார்க்கும் தெளிவாகப் புரியும்

வகையில், இலக்கிய நயம் மிளிர உரைத்தல் அரிதினும் அரிது என்ற கருத்து, சான்றோர்களிடையே நிலவி யிருக்கலாம்; அறநெறியாளரான வள்ளுவர் தம் கருத்து களை அரிதினும் அரியதான குறள் வெண்பாவிலேயே வெளிப்படுத்த முடியும் எனத் துணிந்து அவ்வடிவ அமைப்பிலேயே எழுதியும் இருக்கலாம்.

## 5.3.6 *முடிவுரை*

### 5.3.6.1 இதுவரை கண்டவற்றால் நாம் அறிவன

அ) இலக்கிய வரலாற்றில் வடிவத்தைப் பொருத்த வரை குறள் வடிவம் ஒரு திருப்புமையம்; அது மரபை ஒட்டிய புரட்சி.

ஆ) வள்ளுவர் வெண்பாவைக் கையாண்டதற்கு இயல்பான ஓசை, தூய்மை, படைப்பதிலுள்ள அருமை ஆகியவை காரணங்களாக இருந்திருக் கலாம்.

இ) அவர் சுருங்கிய வடிவத்தைக் கையாண்டதற்கு முன்னோர் கண்ட வழி, கல்வி முறை, சமுதாயச் சூழல், இலக்கியச் சூழல் ஆகியன காரணங் களாக இருந்திருக்கலாம்.

**5.3.6.2** வள்ளுவர் குறள் வெண்பாவைக் கையாண் டதற்கு அடிப்படையான காரணங்கள் இருந் திருக்கும். ஆனால், அக்காரணங்கள் எவை என்பதை இப்போது அறுதியிட்டு உரைக்க முடியாது; இருப்பினும், இவையிவை காரணங் களாக இருந்திருக்கலாம் என்று மட்டுமே கூற முடியும். மேற்சுட்டிய பல்வகைக் காரணங் களுள் சிலவோ பலவோ அவை போல் வனவோ காரணங்களாக இருந்திருக்கலாம் என்றுமட்டும் துணியலாம். இம்முறையில் ஆய்வுகள் தொடருமானால், அறிவியல் அல்லது பிற அணுகுமுறைகளால் உண்மை

யான காரணங்களைக் கண்டறிதலும் கூடும். அதற்கு ஒரு தொடக்கமே இக்கட்டுரை.

## குறிப்புகள்

1. 'பாவிரி மருங்கினைப் பண்புறத் தொகுப்பின்
ஆசிரி யப்பா வெண்பா என்றாங்கு
ஆயிரு பாவினுள் அடங்கும் என்ப' — தொல். 1364.

'வெண்பா நடைத்தே கலி' — தொல். 1365.

'ஆசிரிய நடைத்தே வஞ்சி' — தொல். 1365.

2. 'நெடுவெண் பாட்டே, குறுவெண் பாட்டே,
கைக்கிளை, பரிபாட்டு, அங்கதச் செய்யுளொடு
ஒத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின'
— தொல். 1375.

3. 'நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்
பாடல் சான்ற புலனெறி வழக்கம்
கலியே பரிபாட் டாயிரு பாங்கினும்
உரிய தாகும் என்மனார் புலவர்' — தொல். 999.

'காமங் கண்ணிய நிலைமைத் தாகும்' — தொல். 1378.

4. 'எனவே, இவை இன்றியமையாதன என்றவாறு. ஒழிந்த பாக்கள் இத்துணை அகப்பொருட்கு உரிய வாய் வருதலின்றிப் புறப்பொருட்கும் உரியவாய் வருதலின் ஓதாராயினர்'.

— இளம்பூரணர், தொல்காப்பியம் — பொருளதிகாரம் — இளம்பூரணம், கழக வெளியீடு, சென்னை, (1969), ப. 290.

'ஆசிரியமும் வெண்பாவும் வஞ்சியும் அகம் புறமென்னும் இரண்டிற்கும் பொதுவாய் — வருமாறு நெடுந்தொகையும் புறமும் கீழ்க்கணக்கும் மதுரைக்

காஞ்சியும் பட்டினப்பாலையும் என்பனவற்றுட் காண்க'

— நச்சினார்க்கினியர், தொல்காப்பியம்— பொருளதிகாரம் — நச்சினார்க்கினியர் உரை, கழக வெளியீடு, சென்னை, (1965), ப. 121.

5. 'ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென
நாலியற்று என்ப பாவகை விரியே' — தொல். 1362.

'அந்நிலை மருங்கின் அறமுத லாகிய
மும்முதற் பொருட்கும் உரிய என்ப' — தொல். 1363.

'வாழ்த்தியல் வகைநாற் பாவிற்கும் உரித்தே'
— தொல். 1336.

'......... ......... புறநிலை வாழ்த்தே
கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ'
— தொல். 1337.

6. 'முதற் சங்கத்தில் எத்தனையோ பரிபாடல் நூல்களும் பல வஞ்சிப் பாட்டுகளும் இருந்தனவென்று அறிகிறோம். ஆனால் குறட்பாக்களால் வேறு ஒரு பெரிய இலக்கிய நூல் இருந்ததாகத் தெரியவில்லை. இலக்கண நூல்கள் மட்டும் சில இருந்தனவென்று யாப்பருங்கல விருத்தியால் தெரிகின்றது'

— உ. வே. சாமிநாதையர், திருவள்ளுவரும் திருக்குறளும், கலைமகள் வெளியீடு, சென்னை, (1936), ப. 5.

7. 'அகவுதலில்லாத ஓசையாம். இதனைப் பிற நூலாசிரியர் செப்பலோசை என்ப. அகவுதல் என்பது ஒரு தொழில். அத்தொழில் இதன்கண் இல்லாமையின் 'அஃதன்று' என்றார்.'

— இளம்பூரணர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணம், மு. நூ., ப. 457.

'மேற்கூறிய அகவலோசையன்றிச் செப்பிக் கூறும் ஓசையெல்லாம் வெண்பா எனப்படும்'

பேராசிரியர், தொல்காப்பியம் — பொருளதிகாரம் — பேராசிரியம், கழக வெளியீடு, சென்னை, (1969), ப. 238.

8. பேராசிரியர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியம், மு. நூ., ப. 238.

9. நச்சினார்க்கினியர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - செய்யுளியல், நச்சினார்க்கினியர் உரை, கழக வெளியீடு, சென்னை, (1965), ப. 82.

10. 'செப்புதலாகிய வாக்கியம் போன்ற ஓசைத்தாகி வந்தவாறு காண்க'

— இளம்பூரணர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - இளம்பூரணம், மு. நூ., ப. 457.

'அகவிக்கூறாது ஒருவற்கொருவன் இயல்புவகையானே ஒரு பொருண்மை கட்டுரைக்குங்கால் எழும் ஓசை செப்பலோசை எனப்படும்'

— பேராசிரியர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - பேராசிரியம், மு. நூ.,பக். 238-239.

'அழைத்துக் கூறாது ஒருவற்கொருவன் இயல்புவகையான் ஒரு பொருண்மையைக் கட்டுரைக்குங்கால் எழுந்த ஓசை செப்பலோசை எனப்படும்'

— நச்சினார்க்கினியர், தொல்காப்பியம் - பொருளதிகாரம் - நச்சினார்க்கினியர் உரை, மு. நூ., ப. 82.

11. 'For, it might be remembered, Valluvar's work was intended as an appeal to a wide public. He was not merely a scholar talking to a scholar, but a prophet exhorting his people to a course of action which he consider the most sane for the glorious life'.

— Dr. B. Natarajan, Economic Ideas of Tiruvalluvar, Tirumathi Sornammal Endowment Lectures on Tirukkural, University of Madras, (1971), p. 241

12. 'நெடுவெண் பாட்டே முந்நால் அடித்தே ;
குறுவெண் பாட்டின் அளவெழு சீரே'

— தொல். 1414.

13. 'வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா விரி'

— கபிலர், திருவள்ளுவமாலை, 5.

'குறள்வெண் பாவில் சிறந்திடு முப்பால்'

— உறையூர் முதுகூற்றனார், திருவள்ளுவமாலை, 39.

'வள்ளுவனார் பாடினர் இன்குறள் வெண்பா'

— இழிகட்பெருங்கண்ணனார், திருவள்ளுவ
மாலை, 40.

'வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா'

— குலபதி நாயனார், திருவள்ளுவமாலை, 48.

'கடுகைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்'

— இடைக்காடனார், திருவள்ளுவமாலை, 50.

'அணுவைத் துளைத்தேழ் கடலைப் புகட்டிக்
குறுகத் தரித்த குறள்'

— ஔவையார், திருவள்ளுவமாலை, 51.

14. 'நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்
மென்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப'

— தொல். 1433.

15. 'நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப.'
— தொல். 1434.

6. 'இடைச்சுர மருங்கிற் கிழவன் கிழத்தியொடு
வழக்கிய லாணையிற் கிளத்தற்கு முரியன்.'
— தொல்.1450.

17. அ) தொல்காப்பியர் கூறும் 'அம்மை' என்னும் வனப்பு அமைந்த நூல்கள் அறநூல்கள் என்று கருதப்படுகின்றன.

ஆ) தொல்காப்பியர் 'வழக்கியலாணை' என்று குறிப்பிடும் நூல்கள் அறநூல்கள் என்று கருதப் படுகின்றன.

இ) 'அறம்' என்ற நூல் இருந்தது என்பதற்குச் சங்க இலக்கியச் சான்று:

'அறம் பாடிற்றே ஆயிழை கணவ' — புறம். 34.

ஈ) திருக்குறளில் சில சான்றுகள் :

'பிறன்பொருளாள் பெட்டொழுகும் பேதைமை ஞாலத்து
அறம்பொருள் கண்டார்கண் இல்'
— குறள். 141.

'புறங்கூறிப் பொய்த்துயிர் வாழ்தலின் சாதல்
அறங்கூறும் ஆக்கம் தரும்' — குறள். 183.

'அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்
நின்றது மன்னவன் கோல்' — குறள். 543.

உ) இறந்துபட்ட பழநூல்களில் அறமும் ஒன்று என்பதற்குச் சான்று:

'ஏரணம் உருவம் யோகம்
இசைக்கணக் கிரதம் சாலம்
தாரணம் அறமே சந்தம்
தம்பநீர் நிலமு லோகம்

மாரணம் பொருளென் றின்ன
மான நூல் யாவும் வாரி
வாரணம் கொண்ட தந்தோ
வழிவழிப் பெயரும் மாள'

18. 'The leaf was held in the left hand and the right guided the stylus on it. The left thumb and forefinger moved the leaf slowly to the left, as the right hand went on writing. As the leaf moved between the thumb and the forefinger with the joint as the base, the lines were all marvellously straight and no line in the manuscript was bent or curved. Expert and skilful writers had grown their left thumb nail by half an inch, made a hole or semicircular dent at its tip and inserted the stylus in the hole or dent, and guided it (i.e. wrote) with the right hand. This *dexterous practise* accounted for the uniform size and shape of the characters in the writing'

-- M. Arunachalam, Education in Ancient Tamil Nadu, Gandhi Vidyalayam, Mayuram, (1969), p. 78

19. 'He may go to the teacher again and sit at his feet calmly for clarification of obscure portions. He should move closely with his classmates who are good students, question them about doubtful points and answer them well when he is questioned. If a pupil practices these methods studiously, ignorance will drop away from him ...... . when he freely mingles with the other students and discuss the lesson, he will learn another quarter.

— M. Arunachalam, Education in Ancient TamilNadu, Ibid., pp. 90-91.

20. 'திறனறிந்து சொல்லுக சொல்லை' — குறள். 644.

# 6. ஆத்திசூடியின் அமைப்புமுறை

## 6.1 நோக்கமும் எல்லையும்

**6.1.1** இரண்டு சீரான் அமைந்த அறிவுரைகளைக் கொண்ட அறிவுரைக் கொத்தாக விளங்குவது ஆத்திசூடி. இது, பெரும்பாலும் கட்டளை வாக்கியங்களான் அமைவது; சொல் ஆழம், எளிமை, நினைவு கொள்வதற்கு உரிய நிரல்முறை ஆகிய பண்புநலன்களைப் பெற்று மிளிர்வது. இதற்கு வித்திட்டவர் 12ஆம் நூற்றாண்டினராகக் கருதப்படும் ஔவையார் ஆவார்.

**6.1.2** ஔவையார் எழுதிய ஆத்திசூடியின் காப்புச் செய்யுள், 'ஆத்திசூடி' எனத் தொடங்குகின்றது; அத்தொடக்கத் தொடரே நூலின் பெயராகவும் அமைந்தது என்பர். இது முதற்குறிப்பால் பெற்ற பெயர். கொன்றைவேந்தன், வெற்றிவேற்கை ஆகியவையும் இவ்வாறே காப்புச் செய்யுள்களின் தொடக்கத் தொடர்களான் நூலுக்கு அமைந்த பெயர்களாகும்.

**6.1.2.1** செய்யுளின் தொடக்கத் தொடராலும் நூலுக்குப் பெயர் வழங்கும் வழக்கு இருந்துள்ளது; பொன்வண்ணத்தந்தாதி என்னும் நூற்பெயரும், கொன்றைவேந்தனுக்கு 'அன்னையும் பிதா' என வேறொரு பெயர் வழங்கப்பட்டுள்ளதும்[1] இதற்குச் சான்றுகள் ஆகும்.

**6.1.3** தமிழறிஞர்கள் பலரையும் ஈர்த்து, இன்று, தனித்த ஓர் இலக்கிய வகையாகவே ஆத்திசூடி மலர்ந்து

வருகின்றது. ஆகவே, இவ்விலக்கிய வகையின் அமைப்பை ஆராய வேண்டிய இன்றியமையாமை எழுந்துள்ளது. இவ்வாய்வில், ஆத்திசூடியின் முதல் (அல்லது இரண்டாவது) எழுத்துகளின் அமைப்புமுறை மட்டுமே ஆராயப்படுகின்றது. இவ்வாய்வுக்குக் கீழ்வரும் 14 ஆத்திசூடிகள் அடிப்படைகளாகக் கொள்ளப்படுகின்றன.[2]

1. அறவியல் சூடி — ச. மெய்யப்பன்
2. ஆத்திசூடி — ஔவையார்
3. ஆத்திசூடி — பாரதிதாசன்
4. ஆய்வு சூடி — டாக்டர் தமிழண்ணல்
5. இளையார் ஆத்திசூடி — பாரதிதாசன்
6. தமிழ் சூடி — டாக்டர் வ. சுப. மாணிக்கம்
7. நீதி சூடி — புலவர் சோம.இளவரசு
8. நெறி சூடி — கவிஞர் நாரா. நாச்சியப்பன்
9. புதிய ஆத்திசூடி — பாரதியார்
10. புதிய ஆத்திசூடி — கவிஞரேறு வாணிதாசன்
11. பொது நெறி — சுவாமி சுத்தானந்த பாரதியார்
12. பொதுவுடைமை ஞான அறிவுசூடி — ஆத்திசூடி — டாக்டர் ந. சஞ்சீவி
13. முத்துச்சூடி — ரெ. முத்துக் கணேசன்
14. வரதராசன் ஆத்திசூடி — பொ. கு. வரதராசன்

## 6.2 எழுத்தமைப்பு

6.2.0 ஆத்திசூடிகளில் காணும் முதல் (அல்லது இரண்டாவது) எழுத்துகளின் அமைப்பை, எளிமை

நோக்கி, நான்கு பகுதிகளாகப் பகுத்துக் கொள்ளலாம். 1. உயிர் எழுத்துகள், 2. ஆய்த எழுத்து, 3. மெய் எழுத்துகள், 4. உயிர் மெய் எழுத்துகள்.

### *6.2.1* முதல் பகுதி: உயிர் எழுத்துகள்

**6 2.1.1** அ முதல் ஔ முடிய உள்ள பன்னிரண்டு உயிர் எழுத்துகளை முதல் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் பதினான்கு ஆத்திசூடிகளிலும் இடம் பெற்றுள்ளன. அவை அகர நிரலில் அமைக்கப் பட்டுள்ளன.

### *6.2.2* இரண்டாம் பகுதி: ஆய்த எழுத்து

**6.2.2.1** ஆய்த எழுத்து மொழி முதல் எழுத்தாக வருவது இல்லை. ஆகவே, அதனை இரண்டாம் எழுத் தாகக் கொண்ட அறிவுரைகள் எட்டு ஆத்திசூடிகளில் மட்டும் இடம் பெற்றுள்ளன; பாரதியார், பாரதிதாசன், வாணிதாசன், ச. மெய்யப்பன், சோம. இளவரசு ஆகியோரின் ஆத்திசூடிகளில் இப்பகுதி இடம் பெற வில்லை. பாரதிதாசன் மொழிமுதல் எழுத்துகளை மட்டுமே அகர நிரல்படுத்தி ஆத்திசூடிகளைப் படைத்துள்ளதால், ஆய்த எழுத்தை இரண்டாம் எழுத் தாகக் கொண்ட அறிவுரை இடம் பெறவில்லை. மற்றவர்களின் ஆத்திசூடிகளில் ஆய்த எழுத்து இடம் பெறாமைக்குக் காரணம் தெளிவாகவில்லை.

### *6.2.3* மூன்றாம் பகுதி: மெய் எழுத்து

6.2.3.1 பாரதியார், வாணிதாசன் ஆகியோரின் ஆத்திசூடிகளிலும் பாரதிதாசனின் 'ஆத்திசூடி'யிலும் இரண்டாம் பகுதியொடு இம்மூன்றாம் பகுதியும் இடம் பெறவில்லை; சுவாமி சுத்தானந்த பாரதியார், டாக்டர் ந. சஞ்சீவி ஆகியோரின் ஆத்திசூடிகளில் இம்மூன்றாம் பகுதி மட்டும் இடம் பெறவில்லை.

6.2.3.2 ஔவையார் அவர்களின் ஆத்திசூடியில் க முதல் ன முடிய உள்ள அகரம் ஏறிய மெய்கள் பதினெட்டையும் அகர நிரலில் கொண்ட அறிவுரைகள் இடம் பெற்றுள்ளன. இப்பதினெட்டு உயிர்மெய்களுள் க, ங, ச, ஞ, த, ந, ப, ம, வ ஆகியவை அறிவுரைகளின் முதல் எழுத்துகளாகவும் ட, ண, ய, ர, ல, ழ, ள, ற, ன ஆகியவை அறிவுரைகளின் இரண்டாம் எழுத்துகளாகவும் அமைந்துள்ளன. இவ்வமைப்பு முறையை நாரா. நாச்சியப்பன், பொ.கு. வரதராசன், ரெ. முத்துக் கணேசன் ஆகியோர் அப்படியே பின்பற்றியுள்ளனர். ரெ. முத்துக் கணேசன் அவர்களின் முத்துச்சூடியில் ஙகரத்தை முதல் எழுத்தாகக் கொண்ட அறிவுரை மட்டும் இடம் பெறவில்லை.

6.2.3.3 ச. மெய்யப்பன் அவர்களின் அறவியல் சூடியில் க, ச, த, ந, ப, ம, வ ஆகிய உயிர்மெய்களை முதல் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகளும், ங், ஞ், ட், ண், ய், ர், ல், ழ், ள், ற், ன் ஆகிய மெய் எழுத்துகளை இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகளும் இடம் பெற்றுள்ளன.

6.2.3.4 பாரதிதாசனின் இளையார் ஆத்திசூடியில் க, ச, த, ந, ப, ம, வ என்னும் ஏழு உயிர்மெய்களை முதல் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் மட்டும் நிரல் பெற்று அமைந்துள்ளன. மேற்சுட்டிய ஏழு உயிர் மெய்களும் மொழி முதலில் வரும் அகரம் ஏறிய மெய்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

6.2.3.5 புலவர் சோம. இளவரசு அவர்களின் நீதி சூடியில் முதல் பகுதியை அடுத்துப் பதினெட்டு மெய் யெழுத்துகளையும் இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் இடம் பெற்றுள்ளன. டாக்டர் வ. சுப. மாணிக்கம், டாக்டர் தமிழண்ணல் ஆகியோரின் ஆத்தி சூடிகளில் இரண்டாம் பகுதியை அடுத்துப் பதினெட்டு

மெய்யெழுத்துகளையும் இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் இடம் பெற்றுள்ளன. இம்மூன்று ஆத்திசூடிகளிலும் மெய்யெழுத்துகள் நெடுங்கணக்கு நிரல் பெற்றே அமைந்துள்ளன.

6.2.3.6 இவ்வாறு ஏழுவகை அமைப்பு முறைகள் இம்மூன்றாம் பகுதியில் காணப்படுகின்றன. முதல் பகுதியில் உயிர் எழுத்துகளும் இரண்டாம் பகுதியில் ஆய்த எழுத்தும் நான்காம் பகுதியில் உயிர்மெய் எழுத்து களும் நிரல் பெற்று அமைவதால், இம்மூன்றாம் பகுதியில் மெய் எழுத்துகள் நிரல் பெற்று அமைவதே தக்க அமைப்பு முறையாகும்.

### *6.2.4* நான்காம் பகுதி: உயிர்மெய் எழுத்துகள்

6.2.4.1 உயிர்மெய் எழுத்துகள் மொத்தம் 216. இவற்றுள், *81* உயிர்மெய் எழுத்துகளை மொழிமுதல் எழுத்துகளாகத் தொல்காப்பியம் வரையறுக்கின்றது.[3] இம்மொழிமுதல் எழுத்துகளுள் ஔகாரம் ஏறிய மெய் களையும் ஞா, ஞெ, ஞொ, யா ஆகிய உயிர்மெய்களையும் முதல் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் அருகியே வந்துள்ளன. இதற்கு அடிப்படைக் காரணம், இவ்வெழுத்துகளை மொழிமுதலாகக் கொண்ட சொற்கள் எண்ணிக்கையளவில் மிகக் குறைந்து இருப்பதே.

*6.2.4.1.1* பாரதியார் அவர்களின் புதிய ஆத்திசூடியில் பை, மை ஆகிய எழுத்துகளை முதலாகக் கொண்ட அறிவுரைகள் இடம் பெறவில்லை; பாரதிதாசன் அவர்களின் ஆத்திசூடியில் வ என்னும் எழுத்தை முதலாகக் கொண்ட அறிவுரையும், இளையார் ஆத்தி சூடியில் சு, தூ, ம, மொ ஆகிய எழுத்துகளை முதலாகக் கொண்ட அறிவுரைகளும் இடம் பெறவில்லை; சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்களின் பொதுநெறியில் பொ என்னும் எழுத்தை முதலாகக் கொண்ட அறிவுரை

இடம் பெறவில்லை. டாக்டர் வ.சுப. மாணிக்கம் அவர்களின் தமிழ்சூடியில் மெ என்னும் எழுத்தை முதலாகக் கொண்ட அறிவுரை இடம் பெறவில்லை; கவிஞர் நாரா. நாச்சியப்பன் அவர்களின் நெறிசூடியில் நீ என்னும் எழுத்தை முதலாகக் கொண்ட அறிவுரை இடம் பெறவில்லை; இவற்றிற்கான காரணம் புலனாகவில்லை.

6.2.4.2 தொல்காப்பியம், மொழிமுதல் எழுத்துகள் என வரையறுக்காத ச, சை, சௌ, ஞ, ஞி, ய, யு, யூ யோ, யௌ ஆகியவற்றை முதலெழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகள் பல, ஆத்திசூடிகளில் இடம் பெற்றுள்ளன. மேற்சுட்டிய உயிர்மெய் எழுத்துகள் தொல்காப்பியருக்குப் பின் வந்த இலக்கணிகளால் மொழிமுதல் எழுத்துகளாகக் கொள்ளப்பட்டுள்ளன.

6.2.4.3 பாரதியார் அவர்களின் புதிய ஆத்திசூடியில், இலக்கணிகள் மொழிமுதல் எழுத்துகளாக ஏற்காத ர, ரா, ரீ, ரு, ரூ, ரே, ரோ, ரௌ, ல, லா, லீ ஆகியவற்றை மொழிமுதலாகக் கொண்ட அறிவுரைகள் இடம் பெற்றுள்ளன. இதன் தாக்கம் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் பொதுவுடைமை ஞான அறிவுசூடியிலும் இடம் பெற்றுள்ளது. இவரின் ஆத்திசூடியில் ர, ரா, ரோ, ரௌ, லா, லீ, லே, லௌ ஆகியவற்றை மொழிமுதலாகக் கொண்ட அறிவுரைகள் இடம் பெற்றுள்ளன.

6.2.4.4 மொழிமுதல் உயிர்மெய் எழுத்துகளை முதலாகக் கொண்ட அறிவுரைகளில் விதிவிலக்காக ஒரு சில நுட்ப வேறுபாடுகளும் காணப்படுகின்றன.

6.2.4.4.1 பாரதியார் அவர்களின் புதிய ஆத்திசூடியில் தௌ என்னும் எழுத்தை முதலெழுத்தாகக் கொண்டு அமைய வேண்டிய அறிவுரைக்குப் பதிலாகத் 'தவத்தினை நிதம்புரி' (53) என்னும் அறிவுரை அமைந்துள்ளது; டாக்டர் தமிழண்ணல் அவர்களின் ஆய்வுசூடியில்

'ஞெகிழிபோல் பற்றுக' (59) என்னும் அறிவுரையை அடுத்து 'நேயமுடன் அணுகு' (60) என்னும் அறிவுரை இடம் பெற்றுள்ளது.

*6.2.4.4.2* வு, ஊ, வொ, வோ என்னும் உயிர்மெய் எழுத்துகள் மொழிமுதல் எழுத்துகளாக வருதல் இல்லை; ஔவையார் இந்நான்கு எழுத்துகளுக்குப் பதிலாக முறையே உ, ஊ, ஒ, ஓ என்னும் நான்கு எழுத்து களைக் கொண்டு அறிவுரைகள் வழங்கி உள்ளார். இவ்வெழுத்து அமைப்பு முறை பொருத்தம் உடையது அன்று. ஔவையாரின் இவ்வமைப்பு முறையைப் பொ.கு. வரதராசன் அவர்கள் அப்படியே பின்பற்றி உள்ளார்கள்.

*6.2.4.5* ஔவையார், பாரதியார், சுவாமி சுத்தானந்த பாரதியார், டாக்டர் ந. சஞ்சீவி, ரெ. முத்துக் கணேசன் ஆகியோர் தவிர்த்துப் பிறருடைய ஆத்திசூடிகளில், மொழி முதல் உயிர்மெய் எழுத்துகளை மட்டுமே நிரல்பெற அமைத்தல் வேண்டும் என்னும் எண்ணமே மேலோங்கி நிற்கின்றது. எனினும், அகர நிரலில், மொழிமுதல் வாரா உயிர்மெய் எழுத்துகளைச் சேர்ப்பது பற்றியும் கருத வேண்டியுள்ளது.

*6.2.4.5.1* மொழிமுதலில் வருதல் இல்லாத ஆய்த எழுத்தை இரண்டாம் எழுத்தாகக் கொண்ட அறி வுரைகள் ஆத்திசூடிகளில் இடம் பெற்றுள்ளன; மொழி முதலில் வருதல் இல்லாத அகரம் ஏறிய மெய்களை யும் மெய்எழுத்துகளையும் இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகளும் ஆத்திசூடிகளில் இடம் பெற் றுள்ளன; ஆகவே, மொழிமுதலில் வாரா உயிர்மெய் எழுத்துகளை இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகளை மூன்றாம் பகுதியில் அகர நிரலுக்குத் தக அமைப்பதில் தவறில்லை என்றே தோன்றுகிறது. இம் முயற்சியைச் சுவாமி சுத்தானந்த பாரதியார் அவர்கள் ஓரளவு மேற்கொண்டுள்ளார்கள்; ரெ. முத்துக் கணேசன்

அவர்கள் கடைசி அறிவுரையில் மட்டும் இம்முயற்சியை மேற்கொண்டுள்ளார்கள். இவ்வாறு, மொழிமுதல் வாரா உயிர்மெய் எழுத்துகளை இரண்டாம் எழுத்துகளாகக் கொண்ட அறிவுரைகளைச் சேர்ப்பதன் வழி, ஒவ்வோர் ஆத்திசூடியிலும் உள்ள அறிவுரைகளின் எண்ணிக் கையை ஏறத்தாழ இரட்டிப்பாக்கலாம். வேண்டு மானால், அகர நிரலில் அமையும் எல்லா எழுத்துகளை யும் அச்சுவழி வேறு படுத்தியும் காட்டலாம். இவ்வாறு செய்வதால் மொழிமுதல் எழுத்துகள், மொழிமுதல் வாரா எழுத்துகள் பற்றிய தெளிவும் கிடைக்கும்.

### *6.2.5* முடிவுரை

**6.2.5.1** ஆத்திசூடிகளின் எழுத்தமைப்பு முறை தமிழ் நெடுங்கணக்கை அடிப்படையாகக் கொண்டதாகும். அவற்றுள், மொழிமுதல் எழுத்துகள் அறிவுரைகளின் முதல் எழுத்துகளாக அமையும்; மொழிமுதல் வாரா எழுத்துகள் அறிவுரைகளின் இரண்டாம் எழுத்துகளாக அமையும்.

**6.2.5.2** இவ்வமைப்பு முறையையே மேலும் விரிவு படுத்தின், அகர முதலிகளின் எழுத்தமைப்பு முறையில் ஆயிரக்கணக்கான அறிவுரைகளைக் கொண்ட அறி வுரைக் களஞ்சியங்களை உருவாக்கலாம். மேலும், ஒவ் வொரு துறைக்கும் ஒவ்வொரு துறையிலுள்ள பிரிவுகளுக் கும் தனித்தனி ஆத்திசூடிகள் உருவாக்கலாம். இவ்வாறு உருவாக்கினால், பல்துறை அடிப்படை அறிவை ஓரள வேனும் தமிழில் சுருங்கிய வடிவில் பெற முடியும்; பல் துறை இணைப்புகள் உருவாகும்; சிந்தனை விரிவு பெறும்; தமிழ் வளம் பெறும்.

குறிப்புகள்

1. 'பழைய உரைப் பிரதிகள், நூற்பெயர் கொன்றை வேந்தன் என்பதற்குப் பதிலாக 'அன்னையும் பிதா'

என்ற தொடக்கத் தொடரை வைத்தே நூலைக் குறிப்பிடுகின்றன'

— மு. அருணாசலம், தமிழ் இலக்கிய வரலாறு — பன்னிரண்டாம் நூற்றாண்டு (முதல் பாகம்), காந்தி வித்தியாலயம், தஞ்சை, (1973), ப. 466.

2. பாரதிதாசன் அவர்களின் இரண்டு ஆத்திசூடிகளையும் பூம்புகார் பிரசுரத்தார் 'பாரதிதாசன் ஆத்திசூடி' என்னும் பெயரில் வெளியிட்டுள்ளனர் (1980); ஏனைய 12 ஆத்திசூடிகளையும் ச. மெய்யப்பன் அவர்கள் தொகுத்துப் பதிப்பித்துள்ளார்கள் (மணிவாசகர் நூலகம், 1980).

3. தொல்காப்பியம் காட்டும் மொழிமுதல் எழுத்துகள்

| | | |
|---|---|---|
| க், த், ந், ப், ம் X 12 உயிர்கள் | = | 60 |
| ச் X அ, ஐ, ஔ நீங்கிய ஒன்பது உயிர்கள் | = | 9 |
| வ் X உ, ஊ, ஒ, ஓ நீங்கிய எட்டு உயிர்கள் | = | 8 |
| ஞ் X ஆ, எ, ஒ என்னும் மூன்று உயிர்கள் | = | 3 |
| ய் X ஆ மட்டும் | = | 1 |
| மொத்தம் | = | 81 |

# பொருட் குறிப்பு